ஹரி ஸர்வோத்தம : || श्रीः || வாயு ஜீவோத்தம :

# ஸ்ரீ மத்வர்



श्रीरामं हनूमत्सेव्यं श्रीकृष्णं भीमसेवितम् ।
श्रीव्यासं मध्वसंसेव्यं नमामि ज्ञानसिद्धये ॥

ஹரி ஸர்வோத்தம : || ஸ்ரீ: || வாயு ஜீவோத்தம :

# ஸ்ரீ மத்வர்



வெளியிடுவோர் :

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி பிருந்தாவனம் டிரஸ்ட் (பதிவு)

16, 10வது தெரு, நங்கநல்லூர், சென்னை-61

போன் : 044-22671575

**28-03-2015 - ஸ்ரீ ராமநவமி**

நூலின் பெயர் : **ஸ்ரீ மத்வர்**

ஆங்கிலம் : ஸுமத்வ சேவா, பெங்களூரு

தமிழாக்கம் : திப்ப K. ஸ்ரீநிவாச ராவ் (TKS)

முதற் பதிப்பு : 2015

அச்சிட்டோர் : விஜயா பிரஸ்,
மண்ணிவாக்கம், சென்னை-600 048

காணிக்கை : ரூ. 30/-

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | முகவுரை | 5 |
| 2. | மத்வரின் பெற்றோர் மற்றும் பாஜக முற்றும் உடுப்பியின் வரலாறு | 7 |
| 3. | பிறப்பும், குழந்தைப் பருவமும் | 10 |
| 4. | உபநயனம் மற்றும் கல்வி கற்றல் | 15 |
| 5. | சன்யாசம் | 18 |
| 6. | முதல் தென்னிந்திய யாத்திரை | 22 |
| 7. | முதல் பத்ரீ புனித யாத்திரை | 24 |
| 8. | உடுப்பியில் ஸ்ரீ கிருஷ்ண ப்ரதிஷ்டை | 30 |
| 9. | இரண்டாவது புனித பத்ரீ யாத்திரை | 33 |
| 10. | உடுப்பியில் தங்குதல் | 34 |
| 11. | உடுப்பியில் அஷ்ட மடங்களின் நிர்மாணம் | 38 |
| 12. | கிருஷ்ண மடத்தின் பர்யாய பூஜை | 40 |
| 13. | ஸ்ரீ மத்வரின் அற்புத லீலைகள் | 41 |
| 14. | கடைசி நாட்கள் | 42 |
| 15. | ஸ்ரீ மத்வரின் தத்துவங்களும்அவரின் பணிகளும் | 43 |
| 16. | மஹாவிஷ்ணுவை வழிபடுதல் முறை | 47 |



பத்ரிகாஸ்ரமத்தில் ஸ்ரீ வேதவியாஸருடன் ஸ்ரீ மத்வாசாரியார்



சிஷ்யர்களுடன் ஸ்ரீ மத்வாசாரியார்

## முகவுரை

இந்த புத்தகத்தை எழுதியதின் நோக்கமே த்வைத ஸித்தாந்தத்தை நிலை நிறுத்திய ஸ்ரீ மத்வரின் வரலாற்றை சுருக்கமாக தெரிந்து கொள்ள வேண்டும் என்பதாகும். ஸ்ரீ மத்வாசாரியரின் வாழ்க்கை வரலாற்றை முழுமையாக எழுதுவது என்பது முடியாத செய்கை என்றாலும், அவரைப் போற்றி மிக உயர்ந்த தத்துவத்தை பரப்பிய அவரின் சரித்திரத்தை வெளியிடுவது ஒரு சிறிய முயற்சியே ஆகும்.

பாரத தேசத்தில் பல மஹான்கள் தோன்றி இந்து தர்மம் தழைத்து ஓங்கவேண்டும் என பல முயற்சிகளை எடுத்துக் கொண்டவர்களில் முக்கியமாக கூறப்படுவது ''அத்வைத'' சித்தாந்தத்தை துவங்கிய ஸ்ரீ ஆதி சங்கரரும், அடுத்து வந்த ஸ்ரீ ராமானுஜர் ''விசிஷ்டாத்வைதத்தையும் இன்றும் நிலைத்திருக்கும். ''த்வைத'' சித்தாந்தத்தை பரப்பிய ஸ்ரீ மத்வாசாரியரும் குறிப்பிடத்தக்கவர்கள். இந்த பரம்பரையில் வந்த அனேக நாயன்மார்கள், ஆழ்வார்கள், ஆச்சார்யர்கள் அனைவரும் அவர்களின் ''குரு'' எழுதிய கோட்பாட்டின் படி இந்து தர்மத்தை போதித்து வந்தனர். அது மட்டுமல்லாது தர்மத்துடன் அஹிம்சை என்ற கொள்கைகளையும் பரப்பினார்கள். ஸ்ரீ சங்கராச்சாரியார் தனது 20வது சித்தாந்தத்தை தனக்கு முந்தைய 19 கோட்பாடுகளில் இருந்த தவறுகளை சுட்டிக் காட்டினார். அவர் பின் வந்த ஸ்ரீ ராமானுஜர் 21வது சித்தாந்தமாக ''விசிஷ்டாத்வைதத்தை ஏற்படுத்தினார். இவை அனைத்திற்கும் பிறகே ஸ்ரீ மத்வர் 22வது சித்தாந்தமாக ''த்வைதம்'' என்ற கொள்கைகளை பரப்பினார். இதன் பின் இன்றளவும் வேறு எந்த புதிய சித்தாந்த கோட்பாடுகள் வரவில்லை என்பதே உண்மை.

ஸ்ரீ மத்வரின் கோட்பாடான ''ஹரி ஸர்வோத்தம'' மற்றும் ''வாயு ஜீவோத்தம'' என்ற தத்துவத்தின் அடிப்படையில் இன்றளவும் இறைபணிகளை மத்வ சாஸ்திர மடாதிபதிகள் தங்களது பாடம், ப்ரவசனங்களின் மூலமாக கொள்கைகளை விளக்கிக் கொண்டு வருகிறார்கள். மேலும் அஷ்டமடத்தை தவிர பிரதான மடங்களாக கருதப்படும் ஸ்ரீ உத்திராதி மடம், ஸ்ரீ வியாஸராஜ மடம், ஸ்ரீ நஞ்சன்கூடு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி

மடம், ஸ்ரீ ஸ்ரீபாதராஜ மடம், ஸ்ரீ மாதவ தீர்த்த மடம், ஸ்ரீ பீமன கட்டே மடம், ஸ்ரீ பண்டாரகெரே மடம் ஆகியவைகளின் மடாதிபதிகளும் இன்றளவும் போற்றப்படும் ஆச்சார்யர்கள் ஆவார்கள்.

இவர்களின் மடங்கள் பாரததேசம் முழுமையும் அமைந்துள்ளன. இந்த மஹனீயர்களின் மூல மற்றும் மிருத்திகா பிருந்தாவனங்களை தரிஸனம் செய்வது நம் வாழ் நாளில் செய்யக்கூடிய மிக பெரிய பாக்யமாகும்.

இந்த புத்தகம் மிகப் பெரிய பண்டிதர்களுக்கு தெரியப்படுத்தும் விஷயம் அல்ல. சிறுவர்கள் அனைவரும் இதைப் படித்து ''ஸ்ரீ மத்வரின்'' சரித்திரத்தை அறிந்து அவர் காட்டிய நல்வழியில் சென்று, நேர்மை, உண்மை மற்றும் உழைப்பு இவை அனைத்தின் மூலமாக அவர்கள் முன்னேற வேண்டும் என்ற நோக்கமே ஆகும்.

இந்த புத்தகம் வெளியிட அனுமதி தந்த ''ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி பிருந்தாவனம் டிரஸ்ட்'' தக்ஷிண மந்திராலயம் என போற்றப்படும் ''யதித்ரய ஸன்னிதான''த்தின் மூலமாக மிக்க எளிய முறையில் மொழி பெயர்த்து மக்களிடையே ''ஸ்ரீ மத்வரின்'' சரித்திரத்தை பரப்பவேண்டும் என்ற நோக்கமே ஆகும். அதிலும் குறிப்பாக சிறுவர்கள் படிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் வெளியிடப்படுகிறது.

இந்த நூல் வெளிவருவதற்கு காரணமாக இருந்த ஸுமத்வ ஸேவா இணையதளம், ஸ்ரீ நரஹரி ஸுமத்வா மற்றும் நங்கநல்லூர், ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி பிருந்தாவனம் டிரஸ்டின் கமிட்டி மற்றும் டிரஸ்டிகளுக்கும், பிழை திருத்திக் கொடுத்த ஸ்ரீ V.S. வெங்கடேசன், பதிவிறக்கம் செய்த ஸ்ரீ R. ராஜகோபால், L&T., பொருளுதவி செய்த ஸ்ரீ B. கிருஷ்ணமூர்த்தி, கீழ்கட்டளை, ஸ்ரீமதி பத்மா ப்ரசாத், அவர்களுக்கும், நேர்த்தியாக அச்சிட்டுக்கொடுத்த விஜயா பிரஸ் மண்ணிவாக்கம், சென்னை அவர்களுக்கும் எங்களது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

நமஸ்காரம்

இடம் : யதித்ரய ஸன்னிதானம்
சென்னை-600 061

திப்ப. கிருஷ்ணா ஸ்ரீனிவாச ராவ்

தேதி : 28-03-2015

## ஸ்ரீ மத்வரின் தாய்-தந்தை மற்றும் பாஜக உடுப்பி க்ஷேத்திரங்கள்:

ஸ்ரீ மத்வரின் தாய்-தந்தை, பாகவத சம்பிரதாயத்தை முழுமையாக கடைப்பிடிக்கும் வைஷ்ணவ பிராம்மண வகுப்பை சேர்ந்தவர்கள். இவருடைய தந்தை மத்யகேஹ பட்டர் அல்லது நடிலையா என்றும் தாய் வேதவதி என்ற உத்தம ஸ்திரீயும் ஆவார்கள். தந்தை மத்யகேஹ பட்டர், அனைத்து வேதங்கள், இதிஹாஸங்கள், புராணம், பாகவதம் மற்றும் மஹாபாரதம் ஆகியவற்றில் மிக்க புலமை பெற்று விளங்கினார். இவருடைய வாழ்நாட்களில் மேற்கண்ட சாஸ்திரங்களின் கோட்பாடுகளை அதிக மக்கள் மத்தியில் உரையாற்றுவதை வழக்கமாக கொண்டிருந்தார். தன்னுடைய நித்ய பூஜை மற்றும் வாழ்க்கைக்கு தேவையான அனைத்தையும் செய்வது மட்டுமல்லாமல், ஸ்மிருதி, புராணங்கள் கூறிய வழியிலேயே தன்னுடைய வாழ்க்கையையும் வகுத்துக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

பன்னிரண்டு வருட காலங்கள், தான் இருந்த பாஜக என்னும் இடத்தில் இருந்து தினந்தோறும் உடுப்பி சென்று அங்கு வீற்றிருக்கும் ஸ்ரீ அனந்தேஸ்வரரை, தியானம் செய்து வருவதை வழக்கமாக கொண்டு இருந்தார். இதன் காரணம் ஸ்ரீ அனந்தேஸ்வரர் மீது பக்தி மட்டுமல்லாது தனக்கு புத்ர பாக்யம் கிடைக்க வேண்டும் என்றும் பிரார்த்தித்து வந்தார். அதுவும் தனக்கு பிறக்கும் குழந்தை சிறந்த கல்வி, கேள்விகளில் சிறந்து விளங்கவேண்டும் எனவும் பிரார்த்தித்தார்.


ஸ்ரீ அனந்தேஸ்வரர்

பாஜக க்ஷேத்திரம் என்ற ஊர் மிகச் சிறந்து விளங்கிய ஓர் புனித இடமாகும். ( இந்த ஊரின் முக்கிய இடமே குன்றின் மீது அமைந்துள்ள விமானகிரி என்ற க்ஷேத்திரம் ஆகும்). அதன் மீது மிகப் புராதனமான தேவி துர்க்கையின் ஆலயம்

அமைந்துள்ளது. இந்த கோவில் பகவான் ஸ்ரீ பரஸுராமரால் நிர்மாணம் செய்ததாகும்.

இந்த கோவில் முக்கிய வரலாறு கொண்டது மட்டுமல்லாமல் இதைச் சுற்றி நான்கு தடாகங்கள் (குளம்) உள்ளன. இவை முறையே பரஸு தீர்த்தம், தனுஸ் தீர்த்தம், கதா தீர்த்தம், பாண தீர்த்தம் ஆகும். இவற்றை ஸ்ரீ பரஸுராமரே நிர்மாணம் செய்தார் என்பது கூற்று. இந்த நான்கு குளங்களில் குளிக்கும் அனைவருக்கும் மோக்ஷ பலன் கிடைக்கும். தற்போது ஏராளமான யாத்ரீகர்கள் இந்த குளங்களில் குளித்து விட்டு அவற்றின் நற்பயன்களை பெற்று வருகிறார்கள்.



கதா தீர்த்தம்



பாண தீர்த்தம்



பரஸு தீர்த்தம்



தனுஸ் தீர்த்தம்

''உடுப்பி'' என்ற ஊரில் அமைந்துள்ள முக்கிய தேவாலயங்கள் ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் மற்றும் ஸ்ரீ அனந்தேஸ்வரர் ஆகும். ''உடுப்பி'' என்ற ஊர் சமஸ்கிருதத்தில் உள்ள ''உடு'' என்பதற்கு நக்ஷத்திரம் என்றும் ''பா'' என்றால் கணவர் அல்லது கடவுள் என்றும்

பொருளுடன் உள்ளது. ''உடுபா'' என்றால் சந்திரன் என்ற பொருளும் உண்டு. இந்த ஊரில்தான் சந்திரனுக்கு சிவன் காட்சி தந்தார் என்றும் ஆகவே இங்கு அமைந்துள்ள மூலவருக்கு ''சந்திரமௌலீஸ்வரர்'' என்ற பெயர் பெற்றது. உடுப்பியின் மற்றொரு பெயர் ''சிவாலி'' என்பதாகும். மேலும் இங்கு அமைந்துள்ள தேவஸ்தானம் ''அனந்தேஸ்வரர்''. இவர் விஷ்ணு ரூபியான லிங்கம் (ருத்ரதேவர்) என்று வர்ணிக்கப்படுகிறார். இவர் அமர்ந்திருக்கும் பீடம் ''சிவ-பெள்ளி'' என்று கூறப்படுகிறது. இதன் காரணமாகத்தான் ''சிவாலி'' என்ற பெயரும் இங்கு வழக்கிலுள்ளது. சிவாலி என்ற பிராம்மண வகுப்பு இதன் மூலமாகத்தான் வந்து இருக்க வேண்டும் என்பது ஒரு கூற்று. மற்றும் ''உடுப்பி'' க்ஷேத்திரத்தை ''ரஜத பீடம்'' என்றும் கூறுகிறார்கள். ''ரஜத'' என்பது வெள்ளியைக் குறிக்கும். ''பீட'' என்பது பீடம் (Pedastal). ஆகவே ரஜதபீடம் என்பது மிக்க பொருத்தமானது. மற்றும் கடவுள் பரசுராமரே, சிவன் கோலத்தில் வெள்ளி பீடத்தின் மீது அமர்ந்து இருக்கிறார் என்று தல வரலாறு கூறுகிறது. இங்கு வசிப்பவர்கள் ''துளு'' என்னும் பாஷையை பேசும் பிராமண வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஆவர். இவர்கள், சிவனையும், விஷ்ணுவையும் ஒரு சேர வணங்கும் பழக்கங்களை கொண்டவர்கள். இந்த கூற்றும் ''ஹரியும்-ஹரனும்'' ஒன்றே என்பதாகும்.

**அனந்தேஸ்வரர் :**

''அனந்தா'' என்றால் சர்ப்பம் (பாம்பு) சேஷம் என்ற பொருள். ''ஈஸா'' என்றால் கடவுள். ஆக **''ஸ்ரீ அனந்தேஸ்வரர்''** என்று சேஷ ரூபத்தில் உள்ள ''ஸ்ரீ ஹரியான நாராயணனை குறிப்பதாகும் மற்றும் சேஷ படுக்கையின் மீது வீற்றிருக்கும் ஸ்ரீமன் நாராயணனையும்'' குறிக்கும் சொல்லே! ''அனந்த'' என்றாலே மஹா விஷ்ணு என்றும் பொருள் உண்டு. இங்கு அமைந்திருக்கும் ''லிங்கம்'' விஷ்ணு ரூபியான மஹாவிஷ்ணுவே! இந்த ஆலயத்தில் விஷ்ணு மற்றும் சிவ ஸஹஸ்ர நாமங்களை உச்சரித்து பூஜை

செய்வது மற்றொரு விசேஷமாகும். மூலவருக்கு ''ஸ்ரீ சங்கர நாராயணா'' என்ற பெயரும் உண்டு. ஆக இந்த உன்னத இடம் ''சிவ-வைஷ்ணவ'' க்ஷேத்திரமாக விளங்குகிறது.

இங்கு வரும் யாத்ரீகர்கள் முதலில் ''சந்திரமௌலீஸ்வரரையும்'' அடுத்து ''அனந்தேஸ்வரரையும்'' தரிஸனம் செய்த பிறகுதான் ''ஸ்ரீ கிருஷ்ணரை'' தரிஸனம் செய்ய வேண்டும் என்ற பிரத்யேகமான வழக்கத்தை கொண்டிருக்கிறார்கள். இப்போதும் உடுப்பியில் ஸ்ரீ மத்வாச்சார்யரால் நிர்மாணம் செய்யப்பட்ட ''அஷ்ட மடம்'' என்று கூறும் எட்டு மடத்து யதிகள் (சன்யாசிகள்) மேற்கூறியபடியே தரிஸனம் செய்கிறார்கள் என்பதும் ''பர்யாய'' என்று கூறப்படும் ஒரு மஹோத்ஸவத்துக்கு முன் ''பர்யாய'' ஸ்வாமிகள் இந்த முறைப்படி தரிஸனம் செய்தபிறகு தான் ''பர்யாய'' ''பீடமான சர்வஞ்ய பீடத்தில்'' அமருகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

**பிறப்பும் குழந்தை பருவமும் :**

தந்தை மத்யகேஹ பட்டரின் பிரார்த்தனையின் பயனாக கடவுளின் அனுக்கிரஹத்தால் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவர்தான் உயர்ந்த இடத்தில் அமர்ந்த ''ஆச்சார்யர்'' என அழைக்கப்படும் ஸ்ரீ மத்வர். ஸ்ரீ மத்வரின் முன் அவதாரமான பீமர், அனுமர் என்ற கோட்பாட்டின்படி, வேதவதிக்கு பிறக்கும் குழந்தையின் உயிரில் ''முக்யப்ராணர்'' என்று அழைக்கப்பட்ட ஹனுமன் உள்ளே சென்று குழந்தை சந்திர பிம்பமாகவும், அழகாகவும் பிறந்தது. குழந்தையின் கண்கள் பிரகாசமாக ஒளிர்ந்தது. தந்தை மத்யகேஹ பட்டர் அந்த குழந்தைக்கு ''வாசுதேவன்'' என பெயரிட்டார். காரணம் அதீதபுத்தியுள்ளவராகவும் சதா ''நாராயண'' சிந்தனையுடனும் சரியான கொள்கைளைகளை உலகிற்கு புரியவைக்கவும் இந்த பெயர் மிக பொருத்தமாக அமைந்தது. மற்றும் ''வாசுதேவன்'' என்ற பெயருக்கு சம்ஸ்கிருதத்தில் ''வா'' என்றால் அறிவாற்றல் என்பதும், ''அசு'' என்றால்

பிராணன் மற்றும் காற்று (வாயு) என்றும் ''தேவ'' என்றால் கடவுள் என்றும் மிக பொருத்தமான பெயரை வைத்தார்.

உடுப்பிக்கு அருகில் உள்ள ''பாஜக'' அல்லது ''ரஜதபீடம்'' என்று அழைக்கப்பட்ட இடத்தில் 1238ம் ஆண்டு ஆஸ்வீஜ மாதம் விஜயதஸமி அன்று பிறந்தார். அவர் நிகழ்த்திய பல அரிய நிகழ்ச்சிகளை (அற்புதங்கள்) அவரின் சிறு வயது முதற்கொண்டே நடத்திக்காட்டியுள்ளார். ஓர் நன்னாளில் தாய் மற்றும் தந்தை, அக்குழந்தையைஉடுப்பியில் அமைந்துள்ள அனந்தேஸ்வரர் ஆலயத்திற்கு அழைத்துக் சென்று தரிசனம் செய்தார்கள். பாஜகத்தில் இருந்து உடுப்பிக்கு பிரயாணம் என்பது கொடிய மிருகங்கள் கொண்ட அடர்ந்த காட்டின் வழியாகத் தான் நடந்து அல்லது வண்டியின் மூலம் செல்ல வேண்டும். இருப்பினும் தெய்வத்திற்கு சமமான குழந்தை அவர் கையில் இருந்த போது எவ்வித பயமும் இல்லாமல் பயணம் செய்தார்கள்.

வாசுதேவன், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக தினம், தினம் பாராட்டுக்குரிய செழிப்பான, சிறப்பான வளர்ச்சியை கண்டான். ஒரு நாள் ஓர் முக்கிய நிகழ்ச்சிக்காக வாசுதேவனை அவன் மூத்த சகோதரியிடம் ஒப்புவித்து விட்டு தாய், தந்தை இருவரும் வெளியே சென்றார்கள். சிறிது நேரம் கழித்து குழந்தை வாசுதேவன் அழ ஆரம்பித்தான். எந்த விதமான ஆறுதல் கூறியும் பலனளிக்கவில்லை. அவர் ஒருவேளை, குழந்தை பசியின் காரணமாக அழுகின்றதோ என நினைத்து, அங்கு பசுவிற்காக வேக வைத்த ''கொள்ளு'' என்னும் தானியத்தை சிறிது கொடுத்தாள். ஆனால் ஆச்சர்யம் படத்தக்க வகையில் தானியத்தின் முழு அளவையும் குழந்தை தின்று தீர்த்துவிட்டது. இந்த செய்கையால் அந்த குழந்தைக்கு எந்த விதமான தீங்கும் நேரவில்லை என்பது ஓர் ஆச்சர்யமான விஷயம். இது ''பீம'' அவதாரத்தை குறிப்பதாக அமைந்தது.

மற்றொரு நாள். திடீரென்று வாசுதேவனை காணவில்லை. வீட்டில் எங்கு தேடியும் கிடைக்கவில்லை பெற்றோர்கள் மிக்க கவலை கொண்டு அனைத்து இடங்களிலும் தேடினார்கள். சில மணி நேரங்களுக்கும் மேலாகியும் எவ்வித பயனும் கிடைக்கவில்லை. பிறகு வாசுதேவன் மகிழ்ச்சியுடன். குதூகலமாக ஒரு காளையின் வாலை பிடித்து தொங்கியபடி வந்து கொண்டு இருந்தான். காளையானது தர்மத்தின் அடையாளம். இதன் மூலம் (ஸ்ரீ மத்வர்) ஸ்ரீ வாசுதேவன் தர்ம நெறியில் வாழப் போவதாகவும், எப்பொழுதும் தர்ம நெறியில் இருந்து பிறழாமல் வாழப்போவதாகவும் சூசகமாக தெரிவித்தார். அவர் எப்போதும் தர்ம வழியிலேயே நடப்பவர் என்பது நிதர்சனம்.

ஒரு முறை மத்யகேஹ பட்டர் தான் கடனில் வாங்கிய காளை மாட்டுக்கு பணம் கொடுக்க முடியாமல் மிகவும் கஷ்டப்பட்டார், வேதனை அடைந்தார், காளை மாட்டுக்கு கடன் கொடுத்தவரோ வீட்டின் கதவு பக்கம் (அப்போதய திண்ணை) அமர்ந்து பணம் பெற்று செல்லும் வரை போகமாட்டேன் என அடம் பிடித்தார். அப்போது சிறுவன் வாசுதேவன், மிக எச்சரிக்கையுடன் செயல்பட துவங்கினான். அந்த கடன் கொடுத்த நபரை தன் விரல் அசைவினால் தன் பின்னால் வரச்செய்து வீட்டின் பின்புறம் அழைத்துச் சென்றான். அங்கு குவித்து வைக்கப்பட்டிருந்த ''புளியங்கொட்டை''களை கை நிறைய அள்ளி அவரிடம் கொடுத்தான். அவரும் அதை மனமுவந்து பெருமையோடு பெற்றுக் கொண்டார். சில வினாடிகளில் அதை பார்த்த போது அனைத்தும் தங்க காசுகளாக மாறி கொடுக்க வேண்டிய கடனுக்கு மேலாகவே பெற்றுக்கொண்டார்.

அந்த நபர் உடனே மத்யகேஹ பட்டர் முன்னால் நின்று தாங்கள் கொடுக்கவேண்டிய பணத்தை உங்கள் மைந்தன் கொடுத்துவிட்டான். இனி நீங்கள் கடனிலிருந்து விடுபட்டீர் என கூறினார். இதன் மூலமாக வாசுதேவன் கடனை மட்டும் அடைக்கவில்லை. இந் நற்செயலை மதித்து அதை பெற்றுக் கொண்ட வணிகன் மோக்ஷமும் பெற்றான் என்பது வரலாறு.

வாசுதேவன், மூன்று வயது குழந்தையாக இருந்த போது பெற்றோர்கள் அவனை "நிடியூர்" என்ற இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு நடந்த கோலாகலமான நிகழ்ச்சியில் வாசுதேவன் திடீரென காணாமல் போய்விட்டான். பக்கத்தில் அடர்ந்த காட்டினுள் சென்று விட்டான். அந்த அடர்ந்த காட்டின் வழியே செல்லும் போது வழிப்போக்கர்கள் பலர் எச்சரிக்கை விடுத்து போக வேண்டாம் என தடுத்தார்கள். ஆயினும் அவன் அங்குள்ள "காடுவூர்" என்னும் இடத்தில் அமைந்துள்ள ஸ்ரீமன் நாராயணனை தரிசிக்க போவதாக கூறினான், கூறியதுடன் மட்டுமல்லாமல் "பன்னஞ்ஜே" என்ற இடத்தில் அமைந்துள்ள சிவாலயத்தில் தங்கினான். அங்கிருந்து "உடுப்பிக்கு" சென்று அங்குள்ள ஸ்ரீ அனந்தேஸ்வர தேவஸ்தானம் சென்று அவரை வழிப்பட்டான். கவலையுடனும், கண்ணீருடனும் பெற்றோரும் உற்றோரும் தேட ஆரம்பித்தார்கள். வழிப்போக்கர்கள் சிலர் அக்குழந்தையை காடுவூரில் பார்த்ததாகவும், சிலர் பன்னஞ்ஜேயில் பார்த்ததாகவும் கூறினார்கள். ஆயினும் யாராலும் எங்கு எந்த பக்கம் சென்றான் என கூறமுடியவில்லை. கடைசியாக அனைவரும் உடுப்பி, அனந்தேஸ்வரர் தேவஸ்தானத்திற்கு வந்தார்கள். அங்கு அவர்கள் கண்ட காட்சி "வாசுதேவன் கை கூப்பி வணங்கிய நிலையில் அனந்தேஸ்வரர் முன்பு நின்றிருந்தான்" அனைவரும் மனநிம்மதி அடைந்து அக்குழந்தையிடம் உன்னை இந்த ஆபத்து நிறைந்த அடர்ந்த காட்டு வழியாக யார் உன்னை பாதுகாப்பாக அழைத்து வந்தார்கள் என வினவிய போது, ஏன்? என்ற கேள்வியுடன் "சங்கர-நாராயணன்" என் உடன் வந்து வழி நடத்தி இங்கு அழைத்து வந்தார் என சர்வ சகஜமாக கூறி அனைவரையும் ஆச்சர்யத்தில் ஆழ்த்தினார். நான் தனியாகவே வரவில்லை மற்றும் என்னுடன் ஒரு மெய்காவலர் வந்தார் என்று கூறினான். இது எதை குறிப்பிடுகிறது என்றால் பின்னாட்களில் இவர் சரியான பாதையில் மக்களை அழைத்துச் செல்ல உள்ளார் என்பதே! இதே பதிலை அவர் 30வயது சன்னியாசியாக இருந்தபோது, கங்கை கரையைக் கடக்கும் போது இவரை

எதிர்த்த முகலாய மன்னரிடம் துருக்கி பாஷையில் கூறி உள்ளார். இக்குழந்தை மூன்று வயது நிறைந்தபோது தந்தை இவருக்கு "அக்ஷர அப்யாஸம்" செய்வதற்கு ஏற்பாடுகளை செய்தார். ஒரு சுபயோக சுபதினத்தில் இந்த "அக்ஷர அப்யாஸம்" வெகு விமரிசையாக கொண்டாடி த்யான ஸ்லோகத்துடன் "அ" "ஆ" என்ற எழுத்துடன் ஆரம்பித்தார். குழந்தை தன் தந்தையான ஆசிரியரிடம் கல்வி பயிலத் தொடங்கினான். அவனுக்கு எழுத்துப் பயிற்சி, சொல் பயிற்சி முதலியவை தேவையற்றதாக இருந்தது. காரணம் கல்விக் கடலான அவன் சிந்திக்கும் திறன், கற்றறியும் திறன் அனைத்தையும் முன்னமே தெரிந்திருந்தான். ஆகவே மொழியின் எழுத்துத்தொகுதியை படிக்கவே இல்லை மற்றும் தந்தை ஒரு முறை கூறியபின், மறுமுறை அதை திருப்பிச் சொல்லிக் கொடுக்க வேண்டிய அவசியமே இல்லாமல் போனது. அவன் தேவைக்கு அதிகமான மிகையான அறிவு கொண்டு இருந்ததால் திருப்பிச் சொல்வதையோ அல்லது மீண்டும் படிப்பதையோ விரும்பவில்லை. தந்தை மிக்க சந்தோஷத்துடன் தன் குழந்தை இவ்வளவு புத்தி கூர்மையுடன் விளங்குவதை கண்டு ஆச்சர்யப்பட்டார்.

வாசுதேவன் "நேயம்பள்ளி" என்ற ஊரில், ஒரு முறை தன் தாயுடன் அங்கு நடந்த பிரசங்கத்திற்கு சென்றிருந்தான். அப்போது பேச்சாளர் ஒரு பொருள் பற்றி தவறான கருத்தை கூறினார். வாசுதேவன் உடன் எழுந்து அதை திருப்பிச் சொல்லச் செய்து அதில் உள்ள பிழைகளை திருத்தி சரியான அர்த்தத்தை தெரிவித்தான். இதைக் கேட்டவுடன் மக்களின் கரஒலி விண்ணைப் பிளந்தது. இந்த நிகழ்ச்சி நடந்தபோது அவனுக்கு வயது ஐந்து! இதை போன்றே இவரின் தந்தை ஒருமுறை பிரவசனம் செய்யும்போது, "லிகுச" ஒரு வார்த்தைக்கு அர்த்தம் தெரியாததால் அந்த வார்த்தையை கூறாமல் அதை தவிர்த்து விட்டு மற்றவற்றின் பொருளை கூற ஆரம்பித்தார். இதை கண்ணுற்ற வாசுதேவன் எழுந்து "தந்தையே! ஏன் ஒரு வார்த்தையை தவிர்த்து மற்றவற்றின் பொருளை கூறிக்கொண்டே செல்கிறீர்கள். இதோ அதன்

முழுமையான அர்த்தங்களை உங்களுக்கு விளக்குகிறேன் என கூறி சரியான பொருத்தமான அர்த்தம் கூறினான். இதன் மூலமாக வாசுதேவன் எந்த ஒரு தவறையும் சுட்டிக் காட்டி சரியான விளக்கம் கொடுக்க வேண்டும் என்றும் அதை செய்யாமல் வெறும் பார்வையாளராக இருக்கக் கூடாது எனவும் நிரூபித்தான்.

**உபநயனம் மற்றும் படிப்பு :**

வாசுதேவனுக்கு வயது ஐந்தை அடைந்தவுடன், அவர் தந்தை சாஸ்திர, சம்பிரதாயப்படி உபநயனம் செய்வித்தார். ''பூகவனா'' என்ற ஆசிரியரிடம், ந்யாய, வேதங்கள், வேதாந்த இலக்கியங்கள், ஆகமங்களை பயில அனுப்பினார். (பூகவனா-பூகா-என்றால் பாக்கு, வனா என்றால் - காடு-தோட்டம்தில்லையா என்பது அந்த வட்டார மொழி பேச்சாகும்) ஆசிரியர், அனைத்தும் கற்றறிந்தவர் ஆவார். வாசுதேவன், தான் கற்கும் போது அனைத்தையும் உடனே புரிந்து கொள்ளும் திறமையை பெற்றிருந்தான். இவனை யாராலும் எளிதில் புரிந்து கொள்ளவோ அல்லது விளக்கவோ முடியாத ஒன்றாக விளங்கினான். மற்றும் பாடம் நடத்தும் போது மட்டும் அங்கு ஆசிரியர் சொல்வதை கேட்டுக்கொண்டு இருப்பான். மற்ற சமயங்களில் விளையாட்டு மைதானத்திலேயே பொழுதை களிக்கும் குணம் பெற்றிருந்தான். விளையாட்டு மைதானத்தில் இவனுடையை திறமை, அறிவுடன் கூடிய உடல் வலிமையை காட்டும் விதமாக அமைந்திருந்தது. எப்போதும் ஓட்டம், நீச்சல், மல்யுத்தம், உயரம் தாண்டுதல் ஆகிய அனைத்திலும் முதலாவதாகவே இருந்தான். அவனுடைய தோழர்கள் அனைவரும் சேர்ந்து மல்யுத்தம் செய்த போதும் இவன் ஒருவனே அனைவரையும் வீழ்த்தினான்.

ஆச்சர்யம்! மத்வர் 32 அங்கலக்ஷணங்களுடன், உடல் உருவளவும் வடிமைப்பையும் கொண்டிருந்தார். சாதாரணமாக நோக்கும் போது எவர் ஒருவர் தன் உடலை

வலிமையற்றவராக வைத்து கொண்டு இருக்கிறாரோ அவரின் அறிவுத் திறமையும் முழுமையானதாக இருக்காது என்பது நியதி. ஒரு மனிதன் தன் உடல் வலிமையை மாத்திரம் வளர்த்து கொண்டு இருக்கக்கூடாது, அதனோடு கல்வியின் மீதும் கவனம், அக்கறை எடுத்துக் கொள்ளவேண்டும். அப்போது தான் ''அறிவு கூர்மை'' யுடன் விளங்கமுடியும் என்பதே அவர் சொன்ன செய்தி. மஹா புத்தியுடன் விளங்கிய ஆச்சார்யர் ஒரு முறை தன் சிஷ்யர்கள் பதினைந்து பேரை அழைத்து என்னுடன் ''மல்யுத்தம்'' செய்ய வாருங்கள் என அழைப்பு விடுத்தார். அப்போது அவரின் வயது நாற்பது ஆகும். பதினைந்து சிஷ்யர்களின் வயது இருபதுக்குள் ஆகும். ஆனால் ஆச்சார்யர், அவர்கள் அனைவரையும் காற்றின் மூலமாகவே ஊதி அனைவரையும் செயல் இழக்கச் செய்தார். அனைவரும் நிலத்தின் மீது வீழ்ந்தனர். அவர் மல்யுத்தம் செய்யும் போது யாராலும் அவர் பிடியில் இருந்து விடுபடவோ அல்லது தப்பிச்செல்லவோ முடியவில்லை என்பது மிகவும் ஆச்சர்யமானது. அதே சமயம் தன் பிடியில் இருந்தும் விடுபடவும் செய்தார். யாராலும் வாஸுதேவனை சிறிது நேரம் கூட அவர்கள் பிடியில் வைத்திருக்க முடியவில்லை. இந்த செயல் ''தன்னை யாராலும் அடக்கி பிடிக்கமுடியாது. எல்லா வல்ல கடவுள் ஒருவனைத் தவிர'' என்பதாகும். அவருடைய அவதாரத்தின் நோக்கமே பெருந்துயருடன் அர்த்தமில்லாத பல வகை நூல்களை படித்து புரியாமல் இருக்கும் மனிதர்களுக்கு ''ஆன்மா மற்றும் உள்ளுணர்வு பற்றியதல்லாத இந்த உலக வாழ்க்கை தொடரை உண்மையான அர்த்தங்களை வேதங்களின் பொருள்களை அனைவருக்கும் தெரிவிப்பதே ஆகும். அது போலவே தன் முந்தைய அவதாரம் ''பீமன்'' என்பதை பல முறை நிரூபித்துக் காட்டியுள்ளார். அவர் முன் எந்த ஒரு கல் பாதையும் அதிக பளுஉள்ளது அல்ல என்பதை நிரூபணம் செய்தார்.

தன் வீட்டின் அருகில் அமைந்த ''குஞ்சாரு கிரி'' என்ற குன்றின் மீது அமைந்துள்ள துர்க்கையின் கோவில் இடத்திலேயே காலம் கழித்தார். ஒரு முறை அப்படி அந்த குன்றின் மீது இருந்தபோது அவரின் தாய் ''வாசுதேவா'' என அழைத்ததை கூர்மையுடன் கேட்டுவிட்டு மூன்றே தாவலில் தன் வீட்டை வந்து அடைந்தார். அப்போது இரண்டாவது அடி வைத்த போது ''மணிமான்'' என்று மஹாபாரதத்தில் அழைக்கப்பட்ட ஓர் அசுரன் பாம்பின் வடிவில் அங்குள்ள குறுங்காட்டில் வசித்து வந்தார். அவன் ''வாசுதேவனை'' மேற்கொண்டு நகரவிடாமல் பாம்பு உருவில் வழி மறித்தான். வாசுதேவனோ அஞ்சாமல் தன் கட்டை விரலால் அவனுடைய தலையை நசுக்கிக் மிகக் கொடூரமாகவும் வேகமாகவும் கொன்றார். (இந்த இடத்தை இன்றும் பாஜக க்ஷேத்திரம் போகும் வழியில் தரிசிக்கலாம்). அங்குள்ள கிராம மக்கள் தங்கள் கண்களாலேயே நம்பமுடியாமல் மிக உயர்ந்த நம்பிகையுடன் எந்த விதமான வாத, விவாதங்கள் இன்றி மிக்க ஆச்சர்யம் அடைந்தார்கள். இந்த சமயத்தில் மற்றொரு முறை தாய் ''வாசுதேவா'' என அழைத்த போது மிக நீண்ட தாண்டுதல் மூலம் மிக்க ஒளிர்வுடன் தன் தாயின் முன்னே நின்றார். தன் தாய் எவ்விதத்திலும் மன சஞ்சலம் அடையக் கூடாது என நினைத்தே இச்செய்கையை செய்தார். இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் அவருடை முந்தைய அவதாரமான ''ஹனுமான்'' மற்றும் ''பீமசேனனை'' நினைவு கொள்ளத் தக்க வகையில் அமைந்துள்ளது. இதன் மூலமாக ஒன்றை நினைவு கொள்ளவேண்டும். அது எந்த விதமான விஷச்செயலாக இருந்தாலும் அதை அழிக்கவேண்டும். விஷம் என்ற சொல்லுக்கு நம் நினைவுகளில் உள்ள தரமற்ற விஷத்தை போன்ற எண்ணங்களை அழித்து ''பரம்பொருளை'' அடைவதே நம் இலக்கு, மற்றும் குறிக்கோளாக இருக்கவேண்டும் என்பதை உலகுக்கு உணர்த்தினார்.

இவருடைய குரு. இவரின் பாடங்கள் அனைத்தும் முடியும் தருவாயில் உள்ளது என்பதை உணர்ந்து ''ஐத்ரேய உபநிஷத்'' என்ற பாடத்தை ஆரம்பித்தார். இது ''மஹிதாஸா'' என்ற முனிவரால் எழுதப்பட்ட முதன்மையாக அனைத்து வேதங்களுக்கு முன் தோன்றியது ஆகும். இதன் மீது ''வாசுதேவனுக்கு'' அளவு கடந்த விருப்பம். அவருடைய வாழ்க்கை முழுவதும் இதன்மீது மிக்க பற்று கொண்டிருந்தார். இந்த உபநிஷத் பாடத்தை குருவானவர் அவர்களின் பழைய பாணியிலேயே அர்த்தங்களை சொல்லிக் கொண்டு இருந்தார். ஆனால் ''வாசுதேவன்'', இந்த அர்த்தங்களுடன் அநேக அடிப்படை பொது விதியுடன், மொழி பெயர்த்து அனைவரும் ஒப்புக்கொள்ளும்படி சொன்னார். இச்செய்கையை கண்ட ஆசிரியர் மிகுந்த சந்தோஷத்துடன் ஒப்புக்கொண்டு உண்மையான கடவுள் பக்தி இவன் இருதய பாகத்தில் ''கோவிந்தா'' என்ற நினைவு நிறைந்து உள்ளது என கூறினார். இந்த விதமாக செயல்களே ''குரு தக்ஷிணை'' என மிக்க சந்தோஷம் அடைந்து ''வாசுதேவனை'' குருகுலத்தில் இருந்து அனுப்பினார். அவன் தலைமீது கைவைத்து ஆசீர்வதித்து கடவுளின் உண்மையான அனுக்கிரஹம் உனக்கு உண்டு என கூறி விடை கொடுத்தார். அந்த சமயத்தில் தன்னுடைய சிஷ்யனின் மீது இருந்த அபரிமிதமான பாசத்தின் காரணமாக கண்ணீர் வழிந்தோடியது. குரு தன் சிஷ்யனிடம் நீ இந்த உலகிற்கு சரியான வழிகாட்டியாக இருந்து உண்மையான பக்தி மார்க்கத்தினால் மட்டுமே கிருஷ்ணனின் அருளைப் பெறமுடியும் என்ற மிக உன்னத தத்துவத்தை பரப்பவேண்டும் என்ற கோரிக்கையை முன்வைத்தார். அதனை வாசுதேவன் இதுவே எனது தலையாய பணி என கூறி குருவிற்கு வாக்கு கொடுத்து நமஸ்காரம் செய்து புறப்பட்டான்.

**சன்யாஸ தீக்ஷை :**

வாசுதேவன் ஆழ்ந்த சிந்தனையுடன் தியானத்தில்

ஈடுபட்டு எவ்விதமான பயன் கொள்கை முறையை மேற்கொள்ள வேண்டும் என நீண்ட நிலைப்பாடு எடுக்க முடிவெடுத்தான். அவனுக்கு தன்னுடைய இறைவன் கட்டளை இட்ட தூதுப்பணி என்ன என்றும் தெரியும். தன் பிறப்பு வெறும் திருமண வாழ்க்கையை அனுபவித்து விட்டு பிள்ளைகளை பெற்று அவர்களை வளர்த்து குடும்பத்தை பெருக்குவது அல்ல என்பதை உணர்ந்திருந்தார். தன்னுடைய பிறப்பின் பயன் இறைவனின் தூதுவனாக இருந்து தவறான கொள்கைகள் மற்றும் கோட்பாடுகளை முற்றிலுமாக அகற்றி உண்மையான நிலையான கோட்பாடுகளை உலகில் மீண்டும் நிலைநாட்ட வேண்டும் என்பதே ஆகும். இதற்கு தகுந்த வழி, தான் முற்றிலுமாக குடும்ப பந்தங்களில இருந்து வெளியேறி சன்யாச வாழ்க்கை மேற்கொள்ளவதே ஆகும் என்ற முடிவுக்கு வந்தார். இவரின் பெற்றோர்கள் பலவித முறைகளையும் கையாண்டு இவர் துறவறம் மேற்கொள்ள வேண்டாம் என்று மன்றாடினர். ஆனால் வாசுதேவனோ என் பிறப்பின் நோக்கமே சித்தாந்தங்களை சரியான அர்த்தத்துடன் அனைவருக்கும் அறிவிப்பதே அன்றி சம்சார சாகரத்தில் இருந்து இன்பம் பெறுவதற்காக அல்ல என்பதை தன் தாய் மற்றும் தந்தையிடம் முடிவாக கூறி நமஸ்காரம் செய்து விட்டு வீட்டை விட்டு வெளியேறினார். நேராக உடுப்பிக்கு அருகில் உள்ள ''கலே'' என்ற ஊரில் மகான் ''அச்சுதப்பேக்ஷர்'' என்பவரிடம் சென்றார். இந்த மகான் உண்மை, நேர்மை வாய்ந்தவர் மற்றும் ''பண்டாரகெரே'' என்ற பெயருடைய மடத்தின் தலைவராகவும் விளங்கியவர். இவர் தன் குருவிடம் அத்வைத சித்தாந்தங்களை முழுமையாக கற்றுணர்ந்து சன்யாச தீக்ஷையில் உன்னத உணர்வை கொண்டவராவார். வாசுதேவன் தான் தேர்ந்தெடுத்த ''சன்யாஸ'' வாழ்க்கையை சமய சார்பு இல்லாமல் புதியதாக தேர்ந்தெடுத்து சரியான விளக்கங்களை கோட்பாடுகளுடன் பூர்வாங்கமாக செய்ய வேண்டும் என்ன முழு மனதுடன் திட்டமிட்டார்.

வாசுதேவன் மீது இருந்த அன்பின் காரணமாக, மத்யகேஹ பட்டர் மிகுந்த துயரம் அடைந்தார். ஆனாலும் வாசுதேவனுடைய சன்யாஸ ஸ்வீகாரத்தை அவரால் தடுக்க முடியவில்லை. இவ்விஷயங்களை தன்னுடைய மனைவிக்கு தெரியப்படுத்தினார். இருவரும் சேர்ந்து தன் மகனின் மனதை மாற்ற முயன்று தோல்வி அடைந்தனர். தந்தை, தனயனின் வாக்குவாதங்கள் முற்றியபோதும் தன் மகனின் போக்குப்படி விட்டு விட்டார். அப்போது யாரும் எதிர்பாராத விதமாக தன்னுடைய ஆடையின் ஒரு பகுதியை கிழித்து ''கௌபீனமாக'' அணிந்து கொண்டு தன் சன்யாஸ நிலையை நிலை நாட்டினார். இதை கண்டு வெகுண்ட தாய், தந்தையர் ஏதும் கூறமுடியாமல் தங்களுடைய கோபத்தில் இருந்து விடுபட்டனர். ஆயினும் அவர் தன் தாய், தந்தையிடம் தனக்குப் பிறகு ஒரு மகன் பிறப்பான், அவன் உங்களுடைய அனைத்து தேவைகளையும் பூர்த்தி செய்தபின் சன்யாஸத்தை ஏற்றுக் கொள்வான் என கூறினார். ( அவரே பின்பு ஸ்ரீ விஷ்ணு தீர்த்தர் என பிரசத்தி பெற்று உடுப்பி ஸ்ரீ ஸோதே மடத்தின் தலைவராக திகழ்ந்தார்). சில காலங்களில் வாசுதேவனுக்கு தம்பி பிறந்ததை கேள்வியுற்று உடன் ஊர் திரும்பி தன் தாயை சந்தித்து அவரின் அனுமதியை வேண்டினார். அப்போதே தன் மனத்தை திடமுள்ளதாக அமைத்துக் கொண்டு ஒரு வேளை தன் தாய் தன்னுடைய ''சன்னியாஸ'' தர்மத்திற்கு அனுமதி அளிக்காவிட்டால் அதுவே தன் கடைசி சந்திப்பு என்ற முடிவுடன் சென்றார். தாயும் தன் மனதை மாற்றிக் கொண்டு இதுவே தன் கடைசி சந்திப்பு என்று இல்லாமல், தன மகன் உயர்ந்த சன்யாசியாக இருப்பதே மேல் என நினைத்து முடிவு செய்தார்.

தன் பெற்றோரின் பூர்ண அனுமதியுடன் , தன் குருவான அச்சுதப்ரேக்ஷரிடம், முறையான சன்யாஸ தீக்ஷை பெற்று சாம்ராஜ்ய பட்டாபிஷேகம் என்னும் சடங்கின் மூலமாக பூர்ண ப்ரக்ஞர் என்ற பெயருடன் திகழ்ந்தார். பூர்ணா என்றால் -

முற்றிலுமாக (முழுமையானதாக என்றும் பிரக்ஞான என்றால்) - பரிபூர்ண அறிவுத்திறன் கொண்டவர் என்றும் பொருள் கொள்ள வேண்டும்.

ஒரு நாள் தன் குரு, வயதான காலத்தில் ''கங்கையில் புனித ஸ்நானம் செய்ய வேண்டும் என எண்ணினார். ஆயினும் இந்த வயோதிக காலத்தில் தன் எண்ணம் நிறைவேறுமா? என்ற கேள்வியுடன், தன் சிஷ்யர் ''ஸ்ரீ பூர்ண ப்ரக்ஞரிடம்'' கூறினார். ஆனால் சிஷ்யரோ, தாங்கள் ''கங்கை'' பாயும் இடத்திற்கு செல்ல வேண்டாம், ''கங்கையை''யே இங்கு வரவழைக்கிறேன் என கூறி ''கங்கா தேவியை'' ஸ்தோத்திரம் செய்தார். சிறிது நேரத்தில் ஓர் ஆச்சர்யகரமான நிகழ்ச்சி நடந்தது. மடத்து சிஷ்யர்கள் தினமும் குளிக்கும் மடத்து குளத்தில் நீர் கொப்பளித்துக் கொண்டு நிறைந்து வழிய ஆரம்பித்தது. இதை தன் குருவிற்கு சமர்ப்பணம் செய்து, ''கங்கா'' ஸ்நான எண்ணத்தை பூர்த்தி செய்தார். அதுவே தற்போது ''மத்வஸரோவர்'' என பெயர்பெற்றது.

சிறிது காலம் தன் குருவின் ஆஸ்ரமத்தில் தங்கி இருந்தார். அப்போது ''அத்வைத'' தத்துவ கோட்பாடுகள் மற்றும் தவறான அர்த்தங்கள் கொண்ட இதிஹாஸங்கள் தலைதூக்கி நின்றன. இதன் காரணமாக குருவிற்கும் அவரின் சிஷ்யர்களுக்கும் கலக்கம் ஏற்பட்டு சரியான, உண்மையான அர்த்தங்களை காணமுடியாமல் தவித்தனர். ஸ்ரீ பூர்ண ப்ரக்ஞர், கவனமாக பல பண்டிதர்களிடம் வேதாந்தங்களின் விளக்க உரைகளை கற்றறிந்தார். இதன் மூலமாக உண்மையான அறிவுத்திறனை பெற்று தன்குருவின் வாதத்தின் போது கடுமொழியில் விவாதங்களை செய்ய தயாரானார். அது சமயம், பாகவத ப்ரவசனம் நடந்து கொண்டு இருந்தது. பல புத்தகங்களை ஆராய்ந்து கூர்ந்து நோக்கி அதன் உண்மையான கோட்பாடுகளை தெரிந்து வைத்திருந்த ''ஆச்சார்யர்'' தன் குருவின் விளக்கங்களில் உள்ள தவற்றினை சுட்டிக் காட்டினார். இதை கேட்ட குரு

மலைப்புடன் தன் சிஷ்யனின் அறிவுத் திறமையைக் கண்டு திகைத்து நின்றார். மற்றும் பரிபூர்ணமாக பாகவதத்தை சிறிய வயதில் எப்படி கற்க முடிந்தது என்ற வினாவுடன் இவை அனைத்தும் ஸ்ரீமன் நாராயணனின் கருணையே என மகிழ்ந்தார். பூர்ணப்ரக்ஞரின் அபரிமிதமான அறிவுத் திறமையைக் கண்டு குரு. இவரே தம்' மடத்தின் அதிபதியாக விளங்கவேண்டும் என அதிகார பூர்வமாக ஒப்புக்கொண்டு, மடத்தின் தலைமை பொறுப்பை அவரிடம் கொடுத்து ''ஆனந்ததீர்த்தர்'' என பெயரிட்டார். ஆனந்த-என்றால் நிறைவானது, மற்றும் தீர்த்த-என்றால் கொள்கை/ கோட்பாடுகளை முழுமையாக அறிந்தவர் என பொருள். ''மத்வா'' (மத்வர்) என்பது அவரின் இணைப் பொருட் சொல்லாகும். இதுவே மோட்சத்திற்கு வழிவகுக்கும் சொல்லாகும்.

**முதல் தென்னிந்திய யாத்திரை:**

ஸ்ரீ மத்வர், தன் முதல் தென்னிந்திய யாத்திரையை துவக்கினார். அப்போது எதிர்கொண்ட பல வகையான பண்டிதர்களை வாதங்களால் வென்று வெற்றிக் கொடி நாட்டினார். இதில் முக்கியமாக குறிப்பிடப்பட கூடியவர்கள் புத்திஸாகரா மற்றும் வாதிஸிம்மா என்பவர்களாக இவர்கள் தங்கள் வாதங்களில் தோற்று இரவு நேரம் யாரும் காணாத வகையில் ஊரைவிட்டு வெளியேறினார்கள். தன் குருவை அழைத்துக் கொண்டு கன்யாகுமரி வரை பயணித்தார். அந்த நேரம் விஜயநகர சாம்ராஜ்யம் மிகவும் தழைத்தோங்கி இருந்தது. இந்த விஜய நகர சாம்ராஜ்யமானது மன்னர் விஷ்ணு வர்த்தனனின் சந்ததியினர் கீழ் ஆளுகைக்கு உட்பட்டதாக மைசூர் முதல் மேற்கு கடற்கரை வரை பரவி இருந்தது. இது12ம் நூற்றாண்டின் காலம் ஆகும். அந்த நேரத்தில் மத்வர் க்ஷேத்திராடனம் செய்து மக்களின் மனதில் உள்ள அச்சத்தை போக்கி தன்னுடைய பிரசங்கங்களின் மூலமாக முழுமையான ஓர் எண்ணத்தை உண்டாக்கினார்.

இதன் மூலமாக ஒரு நிரந்தர தீர்வு காண வழி வகுக்கப்பட்டது.

உடுப்பியில் இருந்து புறப்பட்ட அவர், அவரின் அபிமான இடமான விஷ்ணுமங்கலத்திற்கு வந்தார். அந்த சமயத்தில் இவரின் போட்டியாளராக இருந்த ஒருவர் இவரின் சக்தியை உணராது ஓர் போட்டியை நடத்தினார். ''ஸ்ரீ மத்வர்'', சாப்பாட்டை முடித்துக்கொண்டு வந்து அமர்ந்தார், அச்சமயம் அந்த நபர் இருநூறு வாழைப்பழங்களையும், குடம் நிறைய பாலையும் கொடுத்து பவ்யமாக இதை இப்போதே சாப்பிட வேண்டும் என கூறினார். இவரின் உள்நோக்கத்தை புரிந்து கொண்ட ''ஸ்ரீ மத்வர்'' அனைத்து வாழைப்பழங்களையும் சாப்பிட்டு, பாலையும் குடித்து முடித்தார். வந்த நபரின் எண்ணம் அனைவரின் முன்னிலையிலும் இத்தகைய காரியத்தை செய்ய முடியாது மற்றும் செயலாற்றல், செரிமானம் போன்றவைகள் இல்லாதவர் என ஏளனமாக நினைத்து இத்தகைய பரிக்ஷையை முன்வைத்தார். ஆனால் ''ஸ்ரீ மத்வரோ'' அனைவரின் முன்னிலையில் அவர் செய்த செயல் வியப்பில் மட்டுமல்ல இவர் எத்தகையவர் என வினாவுடன் ஆச்சர்யமுற்றனர். இதன் பின் ''ஸ்ரீ மத்வர்'' ''அனந்தசயன'' என்று அழைக்கப்படும் திருவனந்தபுரம் ஸ்ரீ பத்மனாப ஸ்வாமியை தரிஸனம் செய்து விட்டு கள்ளிக் கோட்டை வழியாக கொச்சி சென்றடைந்தார். ஸ்ரீ மத்வர் நீண்டு நெடிய பயணமாக குமாரதாரா மற்றும் நேத்ராவதியின் இடைப்பட்ட பகுதியில் விஜயம் செய்தார். இதன்பின் ராமேஸ்வரத்தில் நான்கு மாத காலம் தங்கிய பிறகு ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்கு வந்து ஸ்ரீ ரங்கநாதரை தரிஸனம் செய்தார்.

இதன் பிறகு வரலாறு படைத்த பிரஸித்தியான ஸ்ரீமுஷ்ணம் வந்து ஸ்ரீ பூவராஹ மூர்த்தியை தரிஸனம் செய்தார். இந்த இடத்திற்கு வரும்போது வழியில் ஒரு தடாகத்தை (குளம்) தன்னுடைய தண்டத்தினால் ஏற்படுத்தி அங்கு உள்ள அனைவருக்கும் சுவையாக குடிநீர் கிடைக்கும்படி செய்தார். அதுவே இன்றும் பிரசித்தி பெற்ற

ஆனந்த தீர்த்தர்'' ஆகும். தன்னை எதிர் கொண்ட திறமை மிக்க அனைவரையும் தன் வாதத்தின் மூலமாக வெற்றி கொண்டார். ஆனந்த தீர்த்தர் ஒரு முறை பண்டிதர்கள் நிறைந்த சபையில் சொற்பொழிவாற்றினார். அப்போது வேத வாக்கியங்களுக்கு மூன்று அர்த்தங்களும், மஹாபாரதத்திற்கு பத்து அர்த்தங்களும், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு நூறு அர்த்தங்களும் உள்ளன என கூறி அதை நிரூபணம் செய்தார். ஸ்ரீ ஆனந்ததீர்த்தர், தன்னுடைய கொள்கை, கோட்பாடுகளின் முறையை துவங்கினார். அதுவே பின்னர், ''த்வைத'' மத கோட்பாடுகள் என சிறப்பு பெற்றதாகும்.

**பத்ரியை நோக்கி புனித யாத்திரை :**

ஏழு வருட காலங்கள், உடுப்பி மற்றும் தென்னிந்திய யாத்திரைகளை முடித்துக் கொண்டு தன் குரு அச்சுதப்ரேக்ஷரின் அனுமதியுடன் வட இந்திய யாத்திரையை மேற்கொண்டார். அப்போது அவரின் குறிக்கோள் ஸ்ரீ வேதவியாஸரை நேரில் சந்தித்து அவரின் ஆசியுடன் திரும்ப வேண்டும் என எண்ணினார். (ஸ்ரீ வேதவியாஸர் இன்றும் என்றும் அழியாமல் வாழ்ந்து கொண்டு இருக்கும் பகவான் ஆவார்). இதன் உண்மையே ஸ்ரீ மத்வாச்சாரியார் என்றும் அழியா சரீரத்துடன் ஸ்ரீ வேதவியாஸரிடம் பாடம் படித்துக் கொண்டு இருக்கிறார் என்பது ஐதீகம். பத்ரீ யாத்திரையின் போது உண்மையான சில சிஷ்யர்களை தன்னுடன் அழைத்துச் சென்றார். இவர்களில் மிக முக்கியமானவர் சத்யதீர்த்தர் என்பவராவார் (இவரே பின்னர் பண்டாரகெரே என்னும் மடத்தின் தலைவராக நியமிக்கப்பட்டவர்) புறப்படும் முன் தன் குருவிடம் விடை பெறும்போது ''ஸ்ரீ பகவத் கீதை''புத்தகத்தை அவருக்கு காணிக்கையாக்கினார். இதன் மூலம் விரைவில் பிரிந்திருக்க வேண்டிய நிலை ஏற்படும் என்று சூசகமாக தெரிவித்தார்.

பத்ரீ செல்லும் வழியில் உள்ள முக்கிய நதிகள், தீர்த்தங்கள், கோவில்களை தரிஸனம் செய்து கொண்டு இமயமலையில்

அமைந்திருக்கும் ஸ்ரீ பத்ரீ க்ஷேத்திரம். ஸ்ரீ ஆனந்த மடம் என்று அழைக்கப்படும் இடத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ நாராயணனை தரிஸித்தார். இவரின் நித்ய கர்மானுஷ்டானம் மிகவும் ஆச்சர்யகரமாக குறிப்பிடும்படி அமைத்துக் கொண்டார். காலை அதுசமயம் உஷத் காலம் என்று கூறும் நேரத்தில் ஆர்ப்பரித்து வரும். குளிர்ந்த நீரை கொண்ட "அலகநந்தா" நதியில் குளிப்பதும், தபஸ் மற்றும் நித்ய பூஜைகள், பாடங்களுடன் எப்போதும் ஸ்ரீமன் நாராயணனின் சன்னிதானத்திலும் மற்றும் அவர் ஆஸ்ரமத்திலும் தங்கினார். அதே சமயம் தனது சிஷ்யர்களை தவிர்த்து மகிழ்வூட்டும் தனிமையை விரும்பி எப்போதும் பகவானை பிரார்த்தனை செய்தபடியே இருந்தார். ஓர் இரவு நேரத்தில் தான் எழுதிய பகவத் கீதையின் பொருளை (பாஷ்யம்) படிக்க எண்ணி புத்தகத்தினை (ஓலைச் சுவடிகளை திறந்தார்). மிக்க பக்தி பரவசத்துடன் ஓ! நாராயணா! என்னுடைய குருவான பாத நாராயணனை சந்தித்து நான் எழுதி இருக்கும் இந்த "கீதையின் பாஷ்ய"த்தை சமர்ப்பணம் செய்ய இருக்கிறேன். அதற்கு நீ அருள்புரிவாயாக என நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கினார் (நமஸ்கரித்தார்) அப்போது "ஓர் அசரீரீ" வாக்கு ஸ்ரீமன் நாராயணனிடமிருந்து வெளி வந்தது. நீ எழுதிய அர்த்தங்கள் அனைத்தும் உண்மையான தத்துவங்களை கொண்டதாகும். அதனை ஏற்றுக்கொள்கிறேன் என்பதாகும். இதன் பிறகு காலை விடிந்ததும் தன் பூஜைகளை முடித்துக் கொண்டு தன் சிஷ்யர்களை ஒன்று திரட்டி "ஸ்ரீ பகவத் கீதையின்" முழுமையான விளக்கங்களை கூறினார்.

ஸ்ரீ மத்வரின் விருப்பம் யாராலும் அணுகமுடியாத துறவி ஸ்ரீ வேதவியாஸரை பத்ரீ சென்று தரிஸனம் செய்யவேண்டும் என்ற அவா ஏற்பட்டது. அம்முனிவர் ஸ்ரீ வேதவியாஸர், மிகச் சிறந்த கல்வி அறிவுள்ளவர்களை தேர்ந்தெடுத்து தன்னுடைய ஆஸ்ரமத்தில், விவரிக்க முடியாத சிறப்பான இடத்தில் இருந்து கொண்டு இன்றும் பாடங்களை நடத்திக் கொண்டு வருகிறார்.

அத்தனைகயவரை நேரில் தரிஸனம் செய்து தன்னுடைய தத்துவங்களை ''த்வைத'' சித்தாந்தம் என்ற பெயருடனும் அதில் முக்கியமாக கூறப்படும் மீமாம்ஸம், பாரதம், பாகவதம் மற்றும் இதிஹாஸ புராணங்களை அவர் முன் வைத்து அவரின் அங்கீகாரத்தை பெற வேண்டும் என்பதாகும்.

இதன் குறிக்கோளாக, உபவாசம் மற்றும் வேண்டுதல்களை மேற்கொண்டார். அது மட்டுமல்லாமல் நாற்பத்து எட்டு நாட்கள் ''காஷ்ட'' மௌன விரதத்தை மேற்கொண்டு யாரிடமும் பேசாமல் பகவத் தியானத்திலேயே இருந்தார். இந்த ப்ரதிக்ஞையின் பயனாக ஓர் இரவு இவருக்கு மேல் பத்ரீக்கு வருமாறு அழைப்பு வந்தது. ஆனால் மனித ரூபத்தில் (வடிவில் மட்டுமே!) இருந்த இவருக்கு மேற்கண்ட பயணம் கடினமும் ஆபத்துகளும் நிறைந்தது என தெரிந்துகொண்டார். ஓர் இனிய காலைப் பொழுதில் தன் சிஷ்யர்களை அழைத்து கீழ்கண்டவாறு எழுதிக் காண்பித்தார். காரணம் அவர் ''காஷ்ட மௌன'' விரதத்தில் இருந்த் காரணத்தால்.

''என் பிரிய சிஷ்யர்களே!'' இந்த இடம் மஹா பவித்ரமானது, ஸ்ரீ மஹா விஷ்ணுவே உயர்ந்தவர். அவருக்கு நிகர் யாரும் இல்லை. என்னுடைய உபதேசங்கள் அனைத்தும் அனைவருக்கும் நன்மை பயப்பதாகும். ஸ்ரீ வேதவ்யாஸ பகவானை தரிஸனம் செய்யப் போகிறேன். நான் மீண்டும் திரும்பி வந்தாலும் வருவேன் அல்லது அங்கேயே தங்கினாலும் தங்குவேன். உங்கள் அனைவரையும் கடவுள் காப்பாற்றுவாராக என எழுதி முடித்தார். அவரின் பிரிய சிஷ்யராக இருந்த ''சத்ய தீர்த்தர்'' என்பவர் இவர் பிரிவை தாங்க முடியாமல், இவரை பின் தொடர்ந்தார். ஆயினும் அவரால் ஸ்ரீ மத்வரின் வேகத்திற்கு ஈடுகொடுக்க முடியாமல் பின் தங்கி இருந்தார். இதை கண்ணுற்ற ஸ்ரீ மத்வர் ஓர் மாலைப் பொழுதில் இவரை பின் நோக்கி செல்லவும் என கையசைத்தார். ஆச்சர்யகரமாக ஸ்ரீ ஸத்யதீர்த்தர் உடனே தன் இருப்பிட ஆஸ்ரமத்தில் இருந்தார்.

ஸ்ரீ மத்வர் தன்னுடைய உபாஸனாமூர்த்தி ஸ்ரீ வேதவியாஸரை நேருக்கு நேர் கண்டுகளித்து நமஸ்கரித்தார். ஸ்ரீ வேதவியாஸர் அவரை ஆரத் தழுவிக் கொண்டு மற்ற முனிவர்களுக்கு சமானமாக ஓர் பீடத்தை (இருக்கை) அளித்தார். ஸ்ரீ வேதவியாஸரின் வாழிடமாக அமைந்த ஆஸ்ரமத்தில் இவருக்கு ஸ்ரீ வேதவியாஸர், வேதங்கள், பிரம்ம ஸூத்திரங்கள், மஹா பாரதம் மற்றும் பஞ்சராத்ரங்களின் உண்மையான அர்த்தங்களை உபதேசித்தார். இவை அனைத்தும் ஸ்ரீமன் நாராயணனால் கூறப்பட்ட ஆதார கூற்றுகளை கொண்டதாகும். மிகக் குறைந்த காலத்திலேயே ஸ்ரீ மத்வர் அனைத்து சாஸ்திரங்களையும் கற்று தன்னுடைய அவதாரத்தின் குறிக்கோளை உணர்ந்து அதற்கான அதிகார பூர்வமாக வேலைகளை செய்ய ஆயத்தமானார். ஸ்ரீ மத்வர் உண்மையை அறிவார்ந்த முறையில் புலப்படுத்துவதற்கு தேவையான பொருள் விளக்குதலை, பொது மக்களை ஈர்க்கும் வகையில் செய்ய வேண்டும் என எண்ணினார். ஸ்ரீ வேதவியாசரின் எண்ணமும் அதே நிலையில் இருந்ததால் இந்த முழுமையான செயல்களை செய்ய ஸ்ரீ மத்வரே சரியான ஆச்சார்யர் அவரே "பூர்ணப்ரக்ஞர்" ஆவார் என கூறினார். இதனை முன்னிட்டு ஸ்ரீ மத்வர், ஸ்ரீ வேதவியாஸரிடம் விடை பெற்று திரும்புவதற்கு ஆயத்தமானார்.

ஸ்ரீ மத்வர், ஸ்ரீ வேதவியாஸரிடம் இருந்து விடைபெற்று கீழ் பதரீக்கு ஆனந்த மடத்திற்கு திரும்புவதற்குள் ''ஸூத்ர பாஷ்யம்'' தயாராக இருந்தது. இந்த பாஷ்யம் மனக்கிளர்ச்சியூட்டும் தன்மை கொண்ட மிகப் பெரிய படைப்பாகவே இருந்தது. இது வேதாந்தத்தின் வடிகட்டிய சாறு ஆகும். இந்த ஸூக்தம் பெரியளவிலான நீடித்து நின்று மனக்கிளர்ச்சியை ஊட்டுகின்ற ஸ்ருதிகள், ஸமிருதிகள், புராணங்கள், இதி ஹாஸங்கள் ஆகியவைகளை கொண்டதாகும்.

இந்த பிரம்ம ஸூத்திரத்திற்கு ஏற்கனவே இருபத்தியொரு

அர்த்தங்களை பலர் பலவிதமாக விவரித்து இருந்தார்கள். இதை பிரம்ம மீமாம்ஸம் என்றும் அழைக்கலானார்கள். ஆனால் (வேதமறிந்த ஸ்ரீ விஷ்ணு தீர்த்தர். ஸ்ரீ மத்வரின் அடிச்சுவட்டையே பின்பற்றி போதிக்கலானார்) இதன் ஒரு பிரதியை ஸ்ரீ மத்வர் தன் குருவான ஸ்ரீ அச்சுதப்ரக்ஷருக்கு அனுப்பிவைத்தார். அப்போது அவர் உடுப்பியில் இருந்தார்.

ஸ்ரீ மத்வர் தன் பிரயாணத்தின் போது முதன் முதலாக கோதாவரி நதி தீரத்தில் ''கன்ஜமா'' என்னும் இடத்தில் மிகப் பெரிய வித்வத் சபையில் பண்டிதர்களிடையே உரையாற்றினார். அச்சமயம் இவர் ஒவ்வொன்றினையும் விவரித்தது மட்டுமல்லாது பகுத்தறிவிற்கு பொருத்தமான காரிய/காரணங்களுடன் அந்த விளக்கங்களை ஆழ்ந்த உணர்வுடன் தொட்டு உரை நிகழ்த்தினார். அது மட்டும் அல்லாமல் அனைத்திற்கும் உபமான , உபமேயம் மற்றும் மெய்யானது என காட்டும் தகவல்களுடன், ஆவணங்களின் மூலமாகவும் நிரூபணம் செய்தார். இந்த சபையில் அத்வைத வேதாந்திகளான சோபன பட்டர் மற்றும் சாமி சாஸ்திரிகள் வீற்றிருந்தனர். மிக்க நீண்ட விவாதத்திற்கு பிறகு சோபன பட்டர், தன்னுடைய தோல்வியை ஒப்புக்கொண்டு, தன் மனதில் நீண்ட காலமாக இருந்து வந்த தத்துவ சிக்கல்களில் இருந்து விடுபட்டு, முற்றிலுமாக ஸ்ரீ மத்வரின் கொள்கைககளை ஒப்புக்கொண்டு அவரின் சீடரானார். இவரே ஸ்ரீ பத்மனாப தீர்த்தர்.

மற்றோர் வேத விற்பன்னரான சாமி சாஸ்திரிகள், ஸ்ரீ மத்வரின் சிஷ்யராக இருந்து பின் ''நரஹரி தீர்த்தர்'' என பட்டம் பெற்றார். மத்வரின் எண்ணப்படி சில காலம் அவருடனேயே தங்கி இருந்தார். அந்த காலகட்டத்தில் கலிங்க நாட்டின் தலைநகரமான கஜபதி என்னும் இடத்திற்கு சென்று அந்த நாட்டின் பிரதம மந்திரியாக ஏகோபித்த அபிப்ராயத்தின்படி நாட்டை காப்பாற்றினார். (இந்த நிகழ்ச்சி கலிங்க அரசன் அகால மரணமடைந்ததன் காரணமாக

அவரின் சிறு வயது மகன் பட்டமேற்றார். ஆனாலும் அந்த நாட்டை சிறப்பாக வழி நடத்திச் செல்ல திறமை கொண்டவர்கள் யாரும் இல்லாததால் ஸ்ரீ மத்வரின் அனுமதியோடும் அவரின் ஆணையின்படியும் பிரதம மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டதாக வரலாறு கூறுகிறது) அவர் 1271 முதல் 1299ம் ஆண்டு வரை அந்த நாட்டின் பிரதம மந்திரியாக இருந்து கொண்டு வழி நடத்திச் சென்றார். பாலக அரசன், வயது வந்ததும் ஸ்ரீ நரஹரி தீர்த்தர் தன்னுடைய வந்த காரியம் அரசாள அல்ல என்று முடிவ செய்து, முழு பொறுப்பையும் அரசனிடம் ஒப்படைத்துவிட்டு புறப்படத் தயாரானார். அப்போது ஸ்ரீ மத்வரின் வேண்டுகோளுக்கு இணங்க அந்த நாட்டின் கஜானாவில் இருந்த ராமர் மற்றும் சீதையின் பிம்பங்களை (ப்ரதிமா) எடுத்துக் கொண்டார். இவை இரண்டும் ஸ்ரீ ஹனுமானால் பூஜித்தவைகள் ஆகும். (ஸ்ரீ மத்வரின் முதல் அவதாரம்) இந்த நிகழ்ச்சியின் பின் ஸ்ரீ ராமர், சீதை விக்ரஹத்தை ஹனுமானால் பீமனுக்கு ''கத்தமாதை'' என்ற இடத்தில் கொடுத்தார் (பீமன் மத்வரின் இரண்டாவது அவதாரமாகும்) இதன் பின் இந்த விக்ரஹங்கள் பல இடங்களில் பலரால் பூஜிக்கப்பட்டு கலியுக காலத்தில் ஒரிசாவை ஆண்ட ''கஜபதி'' என்ற அரசனிடம் வந்து அடைந்தது. இவைகளை அரசன் பூஜைகள் செய்து வந்த போதிலும் பெரும் பாலான நேரங்களில் அரசனின் கஜானாவில் வெறும் சிலையாகவே இருந்தன. இவைகள் மூலராமர் மற்றும் சீதை என பெயர் படைத்ததாகும. காரணம் ஸ்ரீ ராமர் தன் முந்தைய காலத்தில் பூமியில் வாழ்ந்த போது இதை நிர்மாணம் செய்தார் என ஐதீகம் கூறுகிறது.

ஸ்ரீ நரஹரி தீர்த்தர் மத்வரின் கீதா பாஷ்யத்திற்கும், கர்மநிர்ணய என்ற கிரந்தத்திற்கும் பொருள் (தீபிகா) எழுதினார். ஸ்ரீ பத்மனாப தீர்த்தர் ஸ்ரீ மத்வரின் கிரந்தங்களான ''பிரம்ம ஸூத்ர பாஷ்யம்'' அனுவியாக்யானம் மற்றும் ''தஸபிரகரணா''விற்கும் உரை எழுதினார். ஸ்ரீ மத்வர் உடுப்பி சென்று தன்னுடைய ''பிரம்மஸூத்ர'' பாஷ்யத்தின்

சாத்திரங்களை அனைவருக்கும் உபதேசித்ததுடன் தன் தத்துவார்த்தங்கள் அசல் ப்ரமாணமான அர்த்தங்களை விளக்கினார். பிற்காலத்தில் இவரின் குரு ஸ்ரீ அச்சுதப்ரேக்ஷரே இவரின் பக்தி பெற்ற பெற்றி ஆக்கபூர்வ சீடராக மாறினார்.

ஸ்ரீ அனந்தேஸ்வர தேவஸ்தானத்தில் தன் இருப்பிடமாக மூன்றுக்கு மூன்று (3×3) சதுர அடி என்ற அறையில் அமர்ந்து தினமும் தியானம் மற்றும் நீண்ட சிந்தனையில் ஆழ்ந்தார். (இந்த இடத்தை தற்போதும் ஸ்ரீ அனந்தேஸ்வர தேவஸ்தானத்தில் தரிசனம் செய்யலாம்). இந்த இடத்தில் ஓர் முறை மத்வரின் பீடத்தை உடுப்பி ஸோதே மடாதீசரான ஸ்ரீ வாதிராஜர் நிறுவுவதற்கு முயன்றபோது ஆச்சார்யர் அவரது கனவில் தோன்றி இந்த எண்ணத்தை கைவிடுமாறு சொன்னார். (இன்றும் இந்த இடம் வெற்றிடமாகவே காணப்படும். அந்த காலத்தில் இந்த இடம் ஒளி நிறைந்த இடமாக இருந்தது. ஆனால் புதிய கட்டுமானத்தின் காரணமாக இந்த இடம் கோவிலின் உள்ளே இதை தற்போது காணலாம். தகவல் பலகையும் உள்ளது).

**ஸ்ரீ கிருஷ்ண மந்திர (கோவில்) நிர்மாணம்:**



ஸ்ரீ மத்வர் தன் வாழ்நாளில் உடுப்பியில் தங்கி இருந்த காலத்தில் முக்கியமாக நிறைவேற்றிய பல காரியங்களில் மிகவும் போற்றத்தக்கதாக கூறப்படுவது "ஸ்ரீ கிருஷ்ணனை" பிரதிஷ்டை செய்தது ஆகும். அவர் அங்கிருந்த காலத்தில் ஸ்ரீ மத்வர் கடலுக்குச் சென்று குளிக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். இது போன்று செல்லும் ஒரு சமயம் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. ஒரு நாள் காலை பொழுதின் போது கடலில் குளிக்கச் சென்றார். அப்போது அவரையும் அறியாமல் ஓர் இனிமையான, பொருளடங்கிய தாத்பர்யங்கள்

நிறைந்த. ஒரு இசையை இயற்றுவோம் என்ற எண்ணமே இல்லாமல் அதாவது. முன்யோசனையோ அல்லது தயாரிக்கப்பட்ட விவரங்களோ இல்லாமல் மணல் பரப்பின் மீது நடந்து கொண்டு இருந்தார். அப்போது ஒரு ஸ்தோத்திரத்தை இயற்றினார். அதுவே ''த்வாதஸ ஸ்தோத்திரம்'' என பெயர் பெற்றதாகும் (குறிப்பு : சில இதி ஹாசங்களில். ஸ்ரீ மத்வர் கடலில் தத்தளித்துக் கொண்டு இருந்த ஒரு கப்பலை நோக்கி. தன் காவி வஸ்திரத்தை ஆட்டும் போது இதை இயற்றினார் என கூறுவதும் உண்டு) அதன் விவரம் கீழே உள்ளது. இந்த கிரந்தம் 12 அத்யாயங்களுடன் 129 ஸ்லோகங்களை கொண்டதாகும். இவை அனைத்தும் தெளிவான முந்தைய கருத்துகளின் தொகுப்பாகும். அதாவது இவர் எழுதிய கிரந்தங்களில் உள்ள கருத்துகளாகும். இதை முடிக்கும் போது ஒரு மிகப் பெரிய அதிசயம் நடக்கப் போகிறது என்பதனை உணர்ந்தார். அது தான் ''ஸ்ரீ கிருஷ்ணர்'' த்வாரகையில் இருந்து உடுப்பி வந்து பக்தர்களுக்கு அருள் பாலிக்க போகிறார் என்பதாகும். இதை அறிந்த அவர் உற்சாக மிகுதியாலும் மகிழ்ச்சியுடனும் முந்தைய காட்சிகளை நினைத்தே இந்த ''த்வாதஸ ஸ்தோத்திரத்தை'' இயற்றினார். இவை அனைத்தும் அவரையும் அறியாமல் நடந்ததாகும். எனவே தான் மிக்க குதூகலத்துடன் காணப்பட்டார்.

கடைசியாக அவர் மணல் பரப்பின் மீது அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டார். அம்மாதிரியான அசாதாரண நேரத்தில் திடீரென்று கண்களை திறந்து தூரத்தே ஒரு கப்பல் துவாரகையை நோக்கி சென்று கொண்டு இருப்பதும். அது காற்றின் வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியாமல் தத்தளித்துக் கொண்டு இருப்பதையும் கண்டார். உடன் தன் காவி வஸ்திரத்தை எடுத்து காட்டி கரைக்கு வருமாறு சைகை செய்தார். ஆச்சர்யப்படும் விதத்தில் அக்கப்பல் திசை மாறி கரையை நோக்கி வந்தது. அதன் தலைமை மாலுமி உடன் கீழே இறங்கி ஆச்சார்யருக்கு நமஸ்காரம் செய்து. ''தங்களின்

உதவியால் தான் நாங்கள் அனைவரும் உயிர் பிழைத்து கரைக்கு வந்து சேர்ந்தோம். இதற்கு காணிக்கையாக நாங்கள் கொடுப்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என பணிவன்புடன் சொன்னான் ஆனால் ஸ்ரீ மத்வரோ ''நான் ஒரு சன்யாசி எனக்கு பொருள் எதுவும் வேண்டாம், கப்பலில் உள்ள ஒரு மிகபெரிய ''கோபி சந்தன'' கட்டியை கொடுங்கள் என தெரிவித்தார். அந்த நேரத்தில்தான் தான் ஆரம்பித்த த்வாதஸ ஸ்தோத்திரம் ஆறாவது பாகம் முதல் பன்னிரெண்டாம் பாகம் வரை தொடர்ந்து முற்று பெறச் செய்தார். அந்த கோபிசந்தன கட்டியை தானே சுமந்து வந்து உடுப்பியில் உள்ள ''மத்வசரோவரம்'' என கூறப்படும் குளத்தில் கரைத்தார். ஆச்சர்யப்படும் விதத்தில் ஒரு அழகான ஸ்ரீ கிருஷ்ண விக்ரஹம் அதில் இருந்தது. அதுவும் ஓர் கையில் ''மத்து'' மற்றொரு கையில் அதை கடைய உபயோகப்படுத்தப்படும் கயிறும் இருந்தது. இந்த விக்ரஹமானது விஸ்வகர்மாவால் வடிவமைக்கப்பட்டு ஸ்ரீ ருக்மணி தேவிக்கு கொடுக்கப்பட்டதாகும். துவாரகையில் ஸ்ரீ ருக்மணி பூஜை செய்வதற்காக இந்த விக்ரஹம் வடிவமைக்கப்பட்டதாகும். அந்த சிலையை தூய்மை படுத்திய பின் முப்பது நபர்களுக்கு மேல் அதை எடுத்துக் கொண்டவர வேண்டியதாயிற்று காரணம் ஸ்ரீ கிருஷ்ண விக்ரஹத்திற்கு பூஜைகளை செய்ததால் அத்துணை பாரம் வந்ததாக கருதப்படுகிறது.

ஸ்ரீ மத்வர் முன் பிறவியில் ஸ்ரீ பீமனாக இருந்ததால் அவர் ஒருவரே அந்த சிலையை எடுத்துக் கொண்டு வந்து உடுப்பியில் உள்ள ஆலயத்தில் பிரதிஷ்டை செய்தார். அந்த விக்ரஹத்தைத்தான் நாம் தற்போது உடுப்பியில் காண்கிறோம். இதற்கான பூஜைக்கு ஒரு வழிமுறையை ஏற்படுத்தினார். அதன்படி ஓர் விரிவான வழி முறைகளை ஏற்படுத்தி அதை கடைப்பிடிக்க வேண்டிய முறைகளை பூஜகர்களையும் நியமித்தார். ஸ்ரீ கிருஷ்ணருக்கு ஒரு

நாளைக்கு ஒன்பது முறை பூஜைகள் என நிர்ணயித்தார். இதற்காக ஒரு தன்னலமற்ற தியாகம் செய்யக் கூடிய தனி நபர்களின் ஒர் கூட்டு அமைப்பாக நிர்மாணம் செய்துஅதற்கான ஒழுங்கு முறைகளை ஏற்படுத்தினார். மற்றும் விலங்குகளை பலியிடுதல் என்ற தத்துவத்தை மாற்றி கருப்பு உளுந்து மாவினால் செய்யப்பட்ட மிருகங்களின் உருவங்களை கொண்டு பலியிட்டு யாகங்களை நிறைவேற்றினார்.

**இரண்டாம் முறை பத்ரீ பயணம் :**

ஸ்ரீ மத்வர் நீண்ட காலம் உடுப்பியிலேயே தங்கிவிட்டு பின் உத்திர யாத்திரை புறப்பட்டு மீண்டும் பல மலைகளை கடந்து பத்ரீ சென்றார். அச்சமயம் ஒரு முறை கங்கையை கடக்க வேண்டிய தருணம் வந்தது. சிஷ்யர்களுடன் நீண்ட நேரம் காத்திருந்து ஓடம் மற்றும் படகுகள் கிடைக்கவில்லை. உடனே அவர் தன் சிஷ்யர்களை நோக்கி தாங்கள் ஒவ்வொருவரும் கெட்டியாக அடுத்தவரின் கையை பிடித்துக் கொண்டு நான் முன்னே செல்கிறேன். நீங்கள் அனைவரும் என்னை பின்பற்றுங்கள் என கூறினார். அவ்விதமே, அவர்கள் அனைவரும் ஒருவரின் கையை மற்றொருவர் பிடித்துக்கொண்டு, மனோ தைர்யத்துடன் ஆற்று வெள்ளத்தில் இறங்கினார்கள். ஆற்று வெள்ளத்தினால் ஏற்பட்ட அலைமோதல் கூட அவர்களை ஒன்றும் செய்ய முடியாமல் எதிர்கரையை அடைந்தனர். எதிர் கரையில் முகாமிட்டு இருந்த ராஜா ''ஜலாலுதீன் கில்ஜி'' அந்த பிராந்தியத்தின் முழுவதையும் தன்னுடைய ஆட்சியின் கீழ் வைத்துக் கொண்டு அன்னியர்கள் பிரவேசத்தை அவன் அனுமதியுடன் நடந்து கொண்டு இருந்தது. ஆனால் ஸ்ரீ மத்வரோ, யாரிடமும் எவ்வித அனுமதியையும் பெறாமல் அங்கு சென்றது அவரின் மனோதிடம், வீரம் ஆகியவைகளை வெளிக்கொண்டு வந்தது. இதைக் கண்ட ராஜா ஆச்சர்யமுடன், மத்வரை வரவழைத்து விபரங்களை

பெற்றான். அப்போது ராஜாவுடன். ஸ்ரீ மத்வர் அவனுடைய தாய் பாஷையிலேயே (துருக்கி) பேசினார், வெகுவாக பாராட்டிய மன்னன் ஸ்ரீ மத்வருக்கு ஒரு பகுதியை தானமாக வழங்கி அங்கேயே தங்கும்படி வேண்டினான். ஆனால் ஸ்ரீ மத்வரோ அவனுடைய வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளாமல் தன் புனித யாத்திரையை மேற்கொண்டார்.

இரண்டாம் முறையாக பத்ரீகாஸ்ரமம் சென்று ஸ்ரீ வேதவியாஸரை தரிஸனம் செய்தார். அச்சமயம் ஸ்ரீ வேதவியாசரின் மஹாபாரதத்தை கையடக்கமாக மிக்க நேர்த்தியாகவும், நன்னடத்தை சார்ந்த விதிமுறைகளை பின் பற்றியும் உண்மையுடன் கூடிய தனிச்சிறப்பு பெற்றதாக எழுத ஆணையிட்டார். ஸ்ரீ வேதவியாசரின் அனுமதியுடனும் அவரின் தத்துவங்களைக் கொண்டும் மஹா பாரத காவ்யத்தின் உண்மையான சாராம்சம் மாறாமல் 32 பாகங்களாக எழுதினார். அதுவே ''மஹாபாரத தாத்பர்ய நிர்ணய'' என்ற மஹா காவியமாகும். இது அனைவரும் படிக்க வேண்டிய ஒன்றாகும். அந்த சமயத்தில் ஸ்ரீ வேதவியாஸர் மிகவும் அரிதான எட்டு சாலிக்ராமங்களை கொடுத்து பூஜிக்கச் சொன்னார். இவைகள் தற்போது ஸ்ரீ ஸோதே வாதிராஜ மடத்திலும், ஸ்ரீ சுப்ரமண்யா மடத்திலும், ஸ்ரீ வியாஸராஜ மடத்திலும் ஸ்ரீ உத்திராதி மடத்திலும் இருக்கின்றன. பின் இவர் திரும்பும் வழியில் டெல்லி, குருக்ஷேத்ரா, காஸி, கோவா ஆகிய தலங்களின் வழியாக திரும்பினார்.

**உடுப்பியில் தங்குதல் :**

ஆச்சார்ய மத்வர் உடுப்பி க்ஷேத்திரத்தையே தன்னுடைய நிர்வாக மையமாகக் கொண்டு செயல்பட எண்ணினார். அந்த இடத்திலேயே இருந்து கொண்டு தத்துவங்களை முறையாக எழுதி முடிக்கும் செயல் முறையில் இறங்கினார். தன்னை முழுமையாகவும் முழுகவனம் செலுத்தி ஆக்கவளம் பொருந்திய, இலக்கியத்தை சார்ந்த நூல்களை எழுத எண்ணம் கொண்டார். அவர் எழுத்து வடிவிலான

விளக்கங்களை, பத்துக்கும் மேற்பட்ட நூல்களான உபநிஷத்துக்கள், தஸப்ரகரணங்கள், அணுவியாக்யானம் மஹா பாரதம் என்று கூறப்படும் மோக்ஷ சாதனைக்கான விஷயங்கள், ஸ்ரீமத் பாகவதம் போன்றவற்றிற்கு விரிவான, விளக்க மேற்கோள்களை காட்டி எழுதினார். ஆனாலும் இந்த சித்தாந்தங்களை நிலை நாட்ட பல எதிராளிகளை வாதத்தில் எதிர்நோக்க வேண்டியதாயிற்று. ஆயினும் பலர் வாதங்களில் தோற்று இவரின் உரைகளை ஏற்றுக் கொண்டனர். சிலர் அதை நிராகரித்து விட்டு வெளியேறினர். வெளியேற்றப் பட்டவர்கள் இவரை பழிவாங்கும் எண்ணத்துடன் இவரை கொலை செய்யவும் துணிந்தனர். இதற்காக பிரத்யேகமாக ''கொடுஞ்ஜாடி சகோதரர்கள்'' என பெயர் பெற்ற மல்யுத்த வீரர்களை ஏற்பாடு செய்தார்கள். இவரை மல்யுத்தத்திற்கு வருமாறு அழைத்து போட்டி தேதியையும் இடத்தையும் குறிப்பிட்டு விளம்பரம் செய்தார்கள். ஆச்சார்ய மத்வர், அவர்கள் இருவரிடமும் மல்யுத்தம் செய்து அவர்களை தோற்கடித்து செயலிழக்கச் செய்தார். மக்கள் ஆரவாரம் செய்து மகிழ்ச்சி அடைந்தார்கள். இதை கண்ணுற்ற எதிரிகள் ஏதும் செய்ய முடியாத நிலையில் வேற்று உபாயங்களை தேடினார்கள். அந்த நேரத்தில் ஆச்சார்ய மத்வர் விலைமதிக்க முடியாத அரிய நூல் பொக்கிஷங்களை வைத்திருந்தார். மற்றும் அவருடைய சஞ்சார காலத்தில் பல புத்தகங்களை எடுத்துச் சென்று கருத்தாக ஆராய்ச்சிகளை செய்வதற்காக வைத்திருந்தார். அந்த சமயத்தில் இவரிடம் வாதத்தில் தோற்றவர்களான பத்மதீர்த்தர் மற்றும் புண்டரீகபூரி என்ற வேத வல்லுனர்கள் இவர் எழுதிய கிரந்தங்களை திருடிச் சென்று விட்டார்கள். இவர்களின் இந்த திருட்டுச் செயல் மிக அற்ப நோக்கத்துடன் கூடியதாக அமைந்தது. அதாவது இவர் எழுதிய புத்தகங்கள் காணாமல் போய் விட்டால் ''துவைத சிந்தாந்தம்'' காணாமல் போய்விடும். அதை மீண்டும் நிர்மாணிக்க முடியாது என எண்ணினார்கள். இந்த நிகழ்ச்சிகளை ஸ்ரீ மத்வர் அப்போதைய கம்பநாடு அரசர் ராஜா

ஜெயசிம்மர் என்பவரிடம் தெரிவித்தார். உடன் ராஜா தன்னுடைய சிப்பாய்களை அனுப்பி அந்த திருடுபோன நூல்களை மீட்டு அந்த இருவரையும் கைது செய்து அழைத்து வந்து ராஜா முன் நிறுத்தினார்கள். ஆயினும் இவர்களின் இந்த இழிவான செய்கையை கண்டித்து மன்னித்தார்கள்.

திரிவிக்ரமர் என்று அழைக்கப்பட்ட மிகபெரிய அத்வைத பண்டிதர் ராஜா ஜெயசிம்மன் அரச சபையில் சபை பண்டிதராக வீற்றிருந்தார். ஒருமுறை அவர் விஷ்ணுமங்கலத்தில் நடந்த கருத்தரங்கத்தில் கலந்து கொண்டு ஸ்ரீ மத்வரின் உரையை கேட்டார். பின்னர் ஸ்ரீ மத்வர் ''படிக்குடல்'' என்று அழைக்கப்பட்ட கிராமத்தில் அமைந்த ஓர் ஆலயத்தில் விரிவுரையாற்றிக் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் பண்டிதர் திரிவிக்ரமர் அந்த அவையில் ஓர் பார்வையாளராக அமர்ந்திருந்தார். ஆயினும் ஸ்ரீ மத்வரின் உரையில் அமைந்த பொருள்களை ஏற்றுக்கொள்ள முடியாமல் நேராக அவரிடம் வந்து ''ஐயா! தாங்கள் எழுதியவைகளிலும் தங்களின் உரையிலும், சொற்பொழிவிலும் பல தவறுகள் காணப்படுகின்றன'' இவைகளை களய வேண்டும் அல்லது என்னுடன் விவாதத்திற்கு வரவேண்டும் என கூறினார். ஸ்ரீ மத்வர் அவரின் சவால்களை ஏற்று வாத/பிரதிவாதம் நடத்த ஒப்புக்கொண்டார். இந்த வாதங்கள் அரசர், பிரதிநிதிகள், பண்டிதர்கள் மற்றும் பொது மக்களின் மத்தியில் பதினைந்து நாட்கள் நடந்தது. இறுதியில் பண்டித திரிவிக்ரமர் தன்னுடைய அனைத்து ஆற்றலையும் ஆச்சார்யரிடம் சமர்ப்பித்து சரண் அடைந்தார். அவரை அரவணைத்து தன் சீடராக்கி கொண்டார். இவை அனைத்தும் இவரின் மைந்தனான ஸ்ரீ நாராயண பண்டிதாச்சார் என்பவர் எழுதிய ''ஸ்ரீ ஸுமத்வ மஹா காவ்யம்'' என்ற புத்தகத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது. இந்த காவ்யம் ஸ்ரீ மத்வரின் வாழ்க்கை வரலாறு அனைத்தும் அடங்கியதாகும். ஸ்ரீ மத்வர் முழு உரிமையையும் தன் சீடருக்கு அளித்து ''ஸுத்ர பாஷ்யத்திற்கு'' பதவுரை எழுத ஆணையிட்டார். அதுவே

''தத்வ ப்ரதீபிகா'' என்கிற கிரந்தமாகும். மேலும் திரிவிக்ரம பண்டிதாசாரியர் தான் நேரில் கண்ட காட்சி, ஸ்ரீ மத்வர் , ஹனும, பீம, மத்வராக ஸ்ரீ ராம கிருஷ்ண வேதவ்வியாஸரை பூஜித்ததாகும். அந்த காட்சியே ''ஸ்ரீ ஹரி வாயுஸ்துதி'' என்னும் காவ்யமாக இன்றும் மாத்வர்களிடையே சொல்லப்படும் மஹா மந்திரமாகும். ஆனால் ஸ்ரீ நாராயண பண்டிதாச்சார்யர் தான் எழுதிய ''ஸ்ரீ ஹரி வாயு ஸ்துதியை'' ஸ்ரீ மத்வரின் பார்வைக்காகவும் அவரிடம் அனுமதி பெறவும் வைக்கப்பட்ட போது, மத்வர் தன் சுயபுராணம் மாத்திரம் இருக்கலாகாது என எண்ணமுற்று அதன் முன் இரண்டு ஸ்லோகங்களை தானே இயற்றி, ''ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்ம நக ஸ்துதி'' என்று பெயரிட்டார். அதுவே பின்னர் சம்புட க்ரந்தமாக ஆரம்பத்திலும் முடிவிலும் சொல்லும் வழக்கமேற்பட்டது. திரிவிக்ரம பண்டிதாசார்யரின் குமாரர்களான நாராயண பண்டிதாச்சார்யரும் ஸ்ரீ ஸங்கராச்சார்யா என்பவரும் விலை மதிப்பில்லா பண்டிதர்களாக நமக்கு கிடைத்தவர்கள்.

சில காலங்களுக்கு பிறகு மத்வரின் தாய் தந்தையர்கள் வைகுண்டம் அடைந்தபிறகு அவர்களுக்கு செய்ய வேண்டிய அனைத்து ஈமச்சடங்குகளையும் ஸ்ரீ மத்வரின் சகோதரர் செய்து முடித்தார். பின்னர் அவர் ஸ்ரீ மத்வரிடம் தஞ்சம் அடைந்து தனக்கு சன்யாஸதீக்ஷை அளிக்கும்படி வேண்டினார். இதன் பொருட்டு அவர் பல அபூர்வ விரதங்களை மேற்கொண்டு சன்யாஸ தீக்ஷையை பெற்றார்.

**விஸூத்த த்விகுலம் ஸ்ரௌதம் ஸூசிம் க்ருத பிதருக்ரியம் ।**
**விரக்தம் விஷயான் புக்த்வா வ்யதான் மத்வோனுஜம் யதிம்॥**

ஸ்ரீ விஷ்ணு தீர்த்தரின் மகிமையை வர்ணிக்கமுடியாது. அப்பேர்பட்ட மஹா ஞானி ஆவார். அரைப் பற்றி ''ஸ்ரீ ஸூமத்வ விஜய'' மஹா காவ்யத்தில் சர்கம் 15-91 முதல் 120 வரை வர்ணிக்கப்பட்டு உள்ளது. அவர் செய்த தபஸூகளின் மிக முக்கியமாக கூறப்படுவது பஞ்கவ்யத்தினை ஐந்து தினங்களுக்கு ஒரு முறை கொஞ்சம் அருந்தினார்

என்பதாகும். மேலும் அந்த பஞ்சகவ்ய ப்ராஸனத்தையும் (உட்கொள்ளுதல்) விடுவித்து காய்ந்து கீழே விழும் வில்வ இலைகளை தின்று நீரை பருகினார் என விவரிக்கப்பட்டு உள்ளது. இந்த விஷ்ண தீர்த்தரே பின்னர் ஸோதே மடத்தின் பீடாதிபதியானார்.

**உடுப்பியில் அஷ்ட மடங்கள் நிறுவுதல் :**

பின்னர் ஸ்ரீ மத்வர் உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணரை பூஜிக்கும் முறையை ஏற்படுத்துவதற்காக "கண்வதீர்த்தம்" என்ற இடத்தில் ஸ்ரீ விஷ்ணு தீர்த்தருடன் மற்றைய ஏழு நபர்களை துறவறம் மேற் கொள்ளச் செய்தார். இந்த இடம் மங்களூரில் இருந்து பதினோரு மைல்கள் தொலைவில் உள்ளது. தற்போது இந்த இடம் ஓர் உன்னத யாத்ரீகர்கள் செல்லும் இடமாக அமைந்து விட்டது.

இந்த முதல் எட்டு துறவிகளும் ஒருங்கிணைந்து உடுப்பி மடத்தின் நிர்வாகிகளாக அமர்த்தப்பட்டனர். அவர்களின் பரம்பரையே இன்றும் பூஜை மற்றும் நிர்வாகங்களை நடத்திக் கொண்டு வருகிறார்கள். ஸ்ரீ மத்வர் இந்த அஷ்டமடம் என்று அழைக்கப்படும் அனைத்து துறவிகளும் வழிபடுவதற்காக "விக்ரஹங்களை" கண்வ தீர்த்தத்தில் இருந்து எடுத்து கொடுத்தார். அவைகளே இன்றும் "மூல ஸம்ஸ்தான பூஜா" விக்ரஹங்களாக திகழ்கின்றன.

இந்த எட்டு மடங்களின் பெயர்கள்

| முதல் யதி | | மடத்தின் பெயர் |
|---|---|---|
| 1. ஸ்ரீ ரிஷீகேஸ தீர்த்தர் | - | பாலிமார் மடம் |
| 2. ஸ்ரீ நரஸிம்ம தீர்த்தர் | - | அதமார் மடம் |
| 3. ஸ்ரீ ஜனார்த்தன் தீர்த்தர் | - | கிருஷ்ணாபுர மடம் |
| 4. ஸ்ரீ உபேந்தர தீர்த்தர் | - | புத்திகே மடம் |
| 5. ஸ்ரீ வாமன தீர்த்தர் | - | காணியூர் மடம் |
| 6. ஸ்ரீ விஷ்ணு தீர்த்தர் | - | ஸோதே மடம் |
| 7. ஸ்ரீ ராம தீர்த்தர் | - | சிரூர் மடம் |
| 8. ஸ்ரீ அக்ஷோப்ய தீர்த்தர் | - | பேஜாவர மடம் |

இன்றும் இந்த கண்வதீர்த்ததில் பேஜாவர மடம் இருக்கின்றது.

இந்த எட்டு துறவிகளைத் தவிர, துறவு மேற் கொண்ட மற்றவர்களில் முக்கியமாக கருதப்படுபவர்கள் சோபன பட்டர் என்று அழைக்கப்பட்டு பின்னர் ஸ்ரீ பத்மனாப தீர்த்தராக துறவறம் மேற்கொண்டவர் ஆவார். அவரின் பிறகு ஸ்ரீ ஆச்சார்யரின் முக்கிய சிஷ்யர்களாக விளங்கியவர்கள் ஸ்ரீ நரஹரி தீர்த்தர், ஸ்ரீ மாதவ தீர்த்தர், ஸ்ரீ அக்ஷோப்ய தீர்த்தர் ஆவார்கள். இவரே பிறகு ரகுநாத தோண்டு என்று அழைக்கப்பட்ட ராஜ வம்சத்தில் தோன்றி பின் சன்யாஸ தீக்ஷை மேற்கொண்ட ஸ்ரீ ஜெய தீர்த்தர் ஆவார். இவர்களுக்கு பின் மத்வ மடம் பல கிளைகளாக பிரிந்து ஸ்ரீ உத்திராதி மடம், ஸ்ரீ வியாஸராஜ மடம், ஸ்ரீ ஸ்ரீ பாதராஜ மடம், ஸ்ரீ மாதவ மடம், ஸ்ரீ ஸுமதீந்தர மடம் என்று அழைக்கப்பட்டு தற்போது ப்ரஸித்தியாக இருக்கும் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி மடம் என்று பெயர் பெற்றவையாகும். இந்த அனைத்து மடங்களும் தமது வழிவந்த சிஷ்யர்களை உருவாக்கி மத்வ ஸித்தாந்தத்தை நிலைநாட்டிக் கொண்டு இருக்கிறார்கள்.

| | உடுப்பியின் தற்போதைய மடாதீஸர்களின் பெயர் | உபாஸனாமூர்த்தி |
|---|---|---|
| 1. பாலிமாரு மடம் | ஸ்ரீ வித்யாதீஸ தீர்த்தர் | கோதண்ட ராமர், லக்ஷ்மண, சீதா |
| 2. அதமாரு மடம் | ஸ்ரீ விஸ்வபிரிய தீர்த்தர்<br>ஸ்ரீ ஈஷப்ரிய தீர்த்தர் | நான்கு கைகளை உடைய காளிங்க மர்த்தன கிருஷ்ணன் |
| 3. கிருஷ்ணாபுரம் மடம் | ஸ்ரீ வித்யா ஸாகர தீர்த்தர் | காளிங்க மர்த்தன கிருஷ்ணன் |
| 4. புத்திகே மடம் | ஸ்ரீ ஸுகுணேந்திர தீர்த்தர் | உபேந்திர விட்டலா, ருக்மணி, சத்யபாமா |
| 5. காணியூர் மடம் | ஸ்ரீ வித்ய வல்லப தீர்த்தரு | யோக நரஸிம்மா |
| 6. ஸோதே மடம் | ஸ்ரீ விஸ்வ வல்லப தீர்த்தரு | பூவராஹ மூர்த்தி |
| 7. சிரூரு மடம் | ஸ்ரீ லக்ஷ்மீவா தீர்த்தரு | விட்டலா |
| 8. பேஜாவர மடம் | ஸ்ரீ விஸ்வேஸ தீர்த்தரு<br>ஸ்ரீ விஸ்வ பிரஸன்ன தீர்த்தரு | அஜவிட்டலா, ஸ்ரீ தேவி, ஸ்ரீ பூதேவி |

## ஸ்ரீ மத்வரின் அற்புத லீலைகள் :

ஸ்ரீமத்வர் தன்னுடைய மிகப் பரந்த யாத்திரைகளின் போது பல அற்பத லீலைகள் நிகழ்த்தியுள்ளார். அவற்றில் சில. வேத மந்திரங்களின் மீது நம்பிக்கையில்லாத ஒரு அரசன் வேத மந்திரங்களுக்கு ஏதேனும் சக்தி இருக்கிறதா? அப்படி இருந்தால் அதை நிரூபிக்கும்படி ஸ்ரீ மத்வாச்சார்யாருக்கு சவால் விடுத்தான்.

ஸ்ரீ ஆச்சார்யர் ''யா ஔஷதி பூர்வஜாதா'' என்று ஆரம்பிக்கும் வேத சூக்தத்தை உச்சரித்துக் கொண்டு கைப்பிடி தானியங்களை பூமியின் மீது தெளிக்க உடனே அவை முளைத்து செடிகள், பூக்கள், கனிகள், விதைகள் ஆயின. இன்னொரு சமயம் மல்லர்கள் கண்டவாடன் மற்றும் அவனது சகோதரன் ஸ்ரீ ஆச்சார்யரின் கழுத்தை நெறிக்க ஸ்ரீ ஆச்சார்யர் எந்த வித கஷ்டமுமின்றி வேத மந்திரங்களை உரத்த குரலில் ஒலித்து வந்தார். மல்லர்கள் தங்கள் முயற்சியில் தோல்வியுற்று கீழே விழுந்தார்கள். மற்றொரு சமயம் மிகவும் உடல் வலிமையற்ற பிரம்மசாரி சிறுவன் தோள்களின் மீது அமர்ந்து கொண்டு ஸ்ரீ நரசிம்ம ஸ்வாமி தேவஸ்தானத்தின் நான்கு மாட வீதிகளிலும் வலம் வந்தார். பாரந்தி என்ற கிராமத்தில் குளம் ஒன்று மழையின்றி வறண்டு இருந்தது. அதன் மீது மேகக் கூட்டத்தை வரவழைத்து மழை பொழியச் செய்து அதை நீரால் நிரப்பினார்.

அம்பு தீர்த்தா என்ற இடத்தில் பத்ரா நதி பாய்கின்றது. அந்த நதியின் நடுவில் 6.1 மீட்டர் நீளமும் 3.6 மீட்டர் அகலமும் 10.[illegible] மீட்டர் உயரமும் கொண்ட பெரிய பாறை ஒன்று தடங்கலாக இருந்து வந்துள்ளது. அதை யாராலும் அப்புறப்படுத்த இயலவில்லை. ஸ்ரீ ஆச்சார்யர் தனது ஒரே கையினால் அந்த பாறையை தூக்கி சரியான இடத்தில் வைத்து ஆற்றின் மீது பாலம் அமைக்க உதவி செய்தார் (அந்த இடத்தில் உள்ள இந்த பாறையை ''பீமன கல்லு'' என்று அழைக்கிறார்கள்). அதைப் பற்றிய சிறு குறிப்பு

சமஸ்கிருதத்தில் அந்த பாறை மீது பொறிக்கப்பட்டுள்ளது. அதை இன்றும் காணலாம். இதைபோன்று பல நிகழ்ச்சிகளை ஸ்ரீமத்வ விஜயத்தில் காணலாம். ஸ்ரீ மத்வர் தத்துவம், புத்தி கூர்மையை மட்டும் பெற்றிருக்கவில்லை. தன் முந்தைய அவதாரமான ஹனும, பீம என்ற உண்மையையும் பல முறை நிரூபித்துள்ளார்.

**ஸ்ரீ மத்வரின் கடைசி நாட்கள்:**

ஸ்ரீ மத்வர் தன்னுடைய இறுதி வருடங்களில், மேலும் நூல்களுக்கு அவற்றில் மிக முக்கியமாக ந்யாய விவர்ணன, கர்ம நிர்ணய, ஸ்ரீ கிருஷ்ணாம்ருத மஹார்ணவ ஆகியவற்றுக்கு உரைகளை எழுதினார். மற்றும் சில காவ்யங்கள், இவர் நினைத்த அனைத்தும் அவரின் கால கட்டத்தில் செய்து முடித்தார். இருபதாம் நூற்றாண்டு மற்றும் பின்னரும் இவைகள் அனைத்தும் மிக உயரிய உன்னத கட்டத்தில் இருப்பதற்கு ஏதுவாக செய்து முடித்தார். அதே சமயத்தில்/நேரத்தில் ஸ்ரீ நரஹரி தீர்த்தரின் வருகைக்காக மாலை பொழுதில் காத்திருந்தார். அது இவருடைய கடைசி நாட்களில் செய்து முடிக்க வேண்டிய மிகப்பெரிய காரியமாகும். அவரின் கடைசி காலமும் இந்த பூ உலகைவிட்டு மறைந்து செல்லும் நேரம் வரவேண்டியும், சிலகாலம் உடுப்பிக்கு அருகிலுள்ள கண்வதீர்த்தம் என்ற இடத்தில் தங்கி இருந்தார். அவர் தன்னுடைய இருப்பிடத்தில் இருந்தபோது ஸ்ரீ நரஹரி தீர்த்தர் ஒரிஸா நாட்டில் இருந்து ஸ்ரீ ராமர் மற்றும் சீதா விக்ரங்களை கொண்டு வந்து கொடுத்தார். இந்த நிகழ்வு முடிந்த உடன் தான் அவதரித்ததின் நோக்கம் முடிவுக்கு வந்து விட்டது என நினைத்து தன்னுடைய சிஷ்யரான ஸ்ரீ பத்மனாப தீர்த்தரிடம், ஸ்ரீ மடத்தின் அதிகாரப் பொறுப்பை ஒப்படைக்க நினைத்தார். அதன்படியே ஒரு சுப நன்னாளில் ஸ்ரீ பத்பனாப தீர்த்தரிடம் ஸ்ரீமடத்தை ஒப்படைத்தார். அவரின் எண்பதாவது வயதின் ஆரம்பத்தில் பல பண்டிதர்கள், பாமரர்கள் மற்றும் இவரின்

ஐத்ரேய உபநிஷத்தை கூறிக் கொண்டு இருக்கும் போதே ஓர் உன்னதமான நிகழ்வு நடந்தது. இவரின் அடி நிலையில் இருந்து உச்சி வரை தேவர்களால் பூமாரி பொழிந்து ஓர் திரையை ஏற்படுத்தினார்கள். இப்புஷ்பங்களை விலக்கி பார்த்தபோது ''ஸ்ரீ மத்வர்'' அந்த இடத்தில் இல்லாமல் மறைந்து விட்டார். இது அவர் நிகழ்த்திய ஓர் அற்புதம் ஆகும். அதாவது தன் சரீரத்துடன் மறைந்தார் என்பதே! அவர் மறைந்த நாள் மாக ஸுக்லபக்ஷ நவமி ஆகும். (ஆங்கில வருடத்தின் அடிப்படையில் 1317ம் ஆண்டு என குறிப்பிடப்பட்டு உள்ளது). இப்போதும் மேல் பத்ரீயில் ஸ்ரீ வேதவியாஸரிடம் பாடம் படித்துக் கொண்டு இருப்பதாக நம்பப்படுகிறது. இதுவே உண்மையும் ஆகும்! இவர் மறைந்த நாளைத்தான் ''ஸ்ரீ மத்வ நவமி'' என்று மிகச் சிறப்பாக அனைத்து மத்வ பரம்பரை சன்யாசிகளும், மத்வ சித்தாந்தத்தில் வழி வந்தோரும் கொண்டாடுகிறார்கள். மத்வ நவமியே நாம் ஸ்ரீ மத்வாசாரியாருக்கு வெளிப்படையாக மரியாதை செலுத்தும் தினமாகும்.

**ஸ்ரீ மத்வரின் தத்துவங்களும் அவரின் பணிகளும் :**

ஸ்ரீ மத்வரின் தத்துவங்களை ''த்வைத வேதாந்தங்கள்'' என அழைக்கப்படுகிறது. அவருடைய சித்தாந்தங்கள் பல பிரிவுகளாக பிரிக்கப்பட்டு உள்ளது. அவைகள் முறையே பத்து உபநிஷத்துக்கள், இரண்டு கீதா பாஷ்யங்கள், நான்கு பிரம்ம ஸூத்ர பாஷ்யங்கள் மற்றும் தன் சொந்த படைப்புகளாக பத்து தத்துவ மஹா பாரதத்தின் உரை ஒன்று (பாகவதத்தின் மீது உரை) மற்றும் நித்ய கர்மானுஷ்டங்களின் தொகுப்பு ஒன்று மற்றும் கடவுளை குறித்து எழுதிய ஸ்தோத்திரங்கள் ஏழு ஆகும். அவற்றில் மிக்க லயத்துடன் ஸ்வரத்துடன் கூடிய பன்னிரண்டு அத்யாயமாக எழுதிய ''த்வாதஸ ஸ்தோத்திரம்''ஆகும். இவை அனைத்தும் அடங்கியதே ''ஸர்வ மூல கிரந்தம்'' என போற்றப்படும் பொக்கிஷமாகும். பகவத் கீதையின் தத்துவம் உலகளவில்

ப்ரோக்தமானதாகும். காரணம் ஆதி அந்தமில்லாத உரையை கொண்டதாகும். இந்த பகவத் கீதா உலகிலேயே மிக்க ஆழமான உன்னத கருத்துகளை கொண்டதும் அனைத்தையும் கையடக்கமாக எழுதிய ஓர் சுருக்க திசையறி கருவி (Compass) போன்ற புத்தகமாகும். ஸ்ரீ மத்வாச்சார்யாரின் முதல் புத்தகமான ''கீதா பாஷ்யம்'' மிக்க முக்கிய பங்கு வகிக்கிறது. இதை ''அணுமத்வ விஜயத்திலும், கிரந்தமாலிகா ஸ்தோத்திரத்திலும் காணலாம்'' ஸ்ரீ மத்வரின் மஹாபாரத தாத்பர்ய நிர்ணயம் ஆன்மா தொடர்பான மிக்க ஆழ்ந்த கருத்துகளை கொண்ட அனைவராலும் ஒப்புக்கொள்ளக் கூடிய விதத்தில் எழுதி இருப்பது ஓர் உன்னத படைப்பாகும். ஸ்ரீ மத்வர் இரண்டாவது முறையாக பத்ரீக்கு சென்றபோது தாம் எழுதிய மஹாபாரத தாத்பர்ய நிர்ணயத்திற்கு பகவான் ஸ்ரீ வேதவியாசரின் ஒப்புதல் பெற்று அவரின் ஆணைக்கிணங்க அதை வெளியிட்டார். இந்த கிரந்தமானது 32 அத்யாயங்களை கொண்டதுடன் ''ராமாயணம்'' ''மஹாபாரதம்'' ஆகிய இரண்டின் சாரம்சங்களை கொண்டு சுமார் ஐந்தாயிரம் ஸ்லோகங்களை உள்ளடக்கியதாகும்.

வேதங்களும், உபநிஷத்துக்களும் ''அபௌரஷேயா'' என்று அழைக்கப்படுவதாகும் (அதாவது இவை இரண்டும் எந்த ஒரு நூலாசிரியராலும் எழுதப்பட்டது அல்ல) இந்த உபநிஷத்துக்களும் வேதங்களும் விவாதத்திற்கு உரியது அல்ல. அனைத்தும் சாஸ்திரங்களே. வேதங்களே இதிஹாஸங்களையும் மற்றும் புராணங்களையும் ஐந்தாவது வேதம் என்றும் கூறுகிறது. இவைகள் உறுதியுடன் கூறப்பட்ட சாஸ்திரங்கள் ஆகும். ராமாயணம், மஹாபாரதம் மற்றும் பஞ்சராத்ரா ஆகமங்கள் அனைத்தும் இதிஹாஸமாக கருதப்படுகின்றன. பாகவதத்தை புராணம் என கூறுகின்றனர். வேதங்களை சரியான முறையில் அறிய வேண்டுமானால் இதிஹாஸ புராணங்களை நன்கு கற்றறிந்து இருக்க வேண்டும் என்று மஹாபாரதம் சொல்லுகிறது.

சாதாரணமாக பாகவதத்தை படிக்கும்போது ஸ்ரீ ஹரியைத் த்வேஷித்த கம்ஸன், சிசுபாலன், பூதனா போன்றவர்களும் மோட்சத்தை அடைந்தார்கள் என கூறப்பட்டுள்ளது. இந்த கூற்றால் சிலர் ஸ்ரீ ஹரி பக்தியைப் போல ஸ்ரீ ஹரியின் மீது துவேஷமும் முக்தி பெறுவதற்கு சாதனமாகும் என்று தவறாக நினைக்கக் கூடும். ஹரி த்வேஷிகளும், ஸ்ரீ ஹரியை போற்றுபவர்களும் முக்தி அடைவார்கள் என்ற உண்மையல்லாத கூற்றை கூர்ந்து நோக்கவேண்டும். அதாவது இவர்களது உடல்களில் இந்த இரண்டு கோட்பாடுடைய ஜீவர்களும் அதாவது விஷ்ணுவை போற்றுபவர்கள், விஷ்ணுவை தூஷிப்பவர்களும் இருந்தார்கள். இவர்களின் அந்தர்யாமி ஸ்ரீமன் நாராயணன் விஷ்ணு பக்தர்கள் மற்றும் விஷ்ணு துவேஷிகளின் உள்ளே இருந்து இவர்களின் நடவடிக்கைகளுக்கு ஏற்ப பக்தர்களுக்கு (வைகுண்ட) மோக்ஷமும் தூஷிதவர்களுக்கு தாமஸ இடத்திற்கும் அனுப்பினார். ஆகவே ஓர் இடத்தில் இருந்து மற்றோர் இடத்திற்கு செல்லும் வழியாக அதாவது பாவவிமோசனம் நீங்கி மோக்ஷம் அடைவதற்கான ஒரே வழி ஸ்ரீ ஹரி பக்தியாகும். இதையே ஸ்ரீ மத்வர் ஆணித்தரமாக தனது சித்தாந்தத்தில் அதிகார பூர்வமாக கூறியிருக்கிறார்.

ஸ்ரீ மத்வரின் கொள்கைகள், சித்தாந்தங்கள் அனைத்தும், தனது அதிகார பூர்வமாக வேதங்கள், புராணங்கள், ராமாயணம், மஹாபாரதம், பஞ்சராத்ர ஆகமங்கள் இவைகளின் அடிப்படையிலே அனைத்தையும் எழுதி இருக்கிறார் என்றால் அது மிகையாகாது!

ஸ்ரீ மத்வர் தன்னுடைய கொள்கை விளக்கங்களில் வேறு எதனையும் ஒத்திராத, தனித்தன்மை வாய்ந்த விளக்க உரைகளை மிக்க தெளிவாகவும், விரிவாகவும் அறநிலை பிழையின்றியும் எழுதினார். மேலும் இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட பொருள்களை எடுத்துரைக்கும் போது மிக்க நேசத்துடன் சிறப்பாகவும் முடிவில்லா புகழ் பாடும்

செய்கைகளோடு ஸ்ரீமன் நாராயணனே மிக உயர்ந்தவர் என வாழ்வின் மெய் நிலையை எடுத்துரைத்தார். இச்செய்கை எதிர்காலத்தில் வெற்றிகரமாகவும் பிரகாசமாகவும் விளங்கக் கூடியதாக அமைந்தது. இவருடைய தத்துவங்கள் அனைத்தும் ''தத்வவாத'' என குறிப்பிடப்படுகிறது. இவர் இந்த உலகம் பொய்யானது அல்லது போலியானது அல்ல (ஜகத்சத்யம்) உலகம் உண்மை என நிரூபணம் செய்தார். உண்மையின் தனிச் சிறப்பையும், இந்த உலக மக்கள் கடவுளின் உயர்நிலையை எடுத்து கொண்டு ஸ்ரீமன் நாராயணனே உயர்ந்தவர் என்ற கொள்கையை எடுத்துகொள்ள வேண்டும் என்று கூறினார். அதுவே ''ஹரி ஸர்வோத்தம'' என்ற தத்துவமாகும். இவருடைய தத்துவங்களில் மிக முக்கியமான கருத்தாக, தனி வேறுபாடுகளை ஐந்து விதமாக ''பஞ்சபேதம்'' என கூறினார். அவைகள் முறையே

1. கடவுள் மற்ற ஆன்மாக்களை விட தனியான வேறு பாடுகளை கொண்டவர். ''தேவ-ஜீவபேதம்'' -கடவுளுக்கும் -ஜீவத்திற்கும் உள்ள பேதம்)
2. கடவுளின் வாழ்க்கை - தேவ - ஜடபேத - கடவுளுக்கும் ஜடத்திற்கும் உள்ள வித்யாசம்
3. ''ஜீவத்திற்கும்'' - ஜடத்திற்கும் உள்ள பேதம்
4. ''ஜீவத்திற்கும்'' - ஜீவத்திற்கும் உள்ள பேதம்
5. ''ஜடத்திற்கும் - ஜடத்திற்கும் உள்ள பேதம்

ஸ்ரீ மத்வரின் முக்யமான கோட்பாடு, கொள்கையானது உலகம் ஊகமல்லாத உண்மையானது ஒன்று. அது கடவுளின் படைப்பு. அது எந்த தனி மனிதனாலும், கூட்டாகவும் நிர்மாணித்தது அல்ல. அது மனிதர்களின் மூலமாகத்தான் படைக்கப்பட்டது எனில் ஏன் அனைவரும் குறைபாடற்ற, முழு நிறைவான உண்மையான இன்பங்களை அனுபவிக்க முடியவில்லை என ஆணித்தரமான கேள்வியை எழுப்பினார்.

மேலும்கடவுளிடம் செலுத்தும் பக்தி ஒன்றே அவரிடம் சேருவதற்கான ஒரே வழி (அதாவது மோட்சம்) என அழுத்தமாக வலியுறுத்திக் கூறினார். ஸ்ரீமன் நாராயணனிடம் பெருவிருப்புணர்வோடு ஈடுபாடு கொண்டு அவரிடம் சரணாகதி அடைந்தால் நாம் அனைத்து எல்லைகளையும், வரம்புகளையும் கடந்து அவரின் அன்பை பெறலாம் (அதுவே மோட்சம்).

**கடவுள் :** இந்த வார்த்தைக்கு அனேக விளக்கங்கள் உண்டு என்றாலும் ஸ்ரீ மத்வரின் கூற்றுப்படி, இறைவன் மிக்க ஆற்றல் வாய்ந்த யாருடைய ஆளுமைக்கும் உட்படாத தன்னுரிமை கொண்டு இருக்கின்றவரும், அனைத்துக்கும் உரியவராக போற்றப்பட்டு, பெறப்படுவது மற்றும் அளிக்கப்படுவது போன்ற செயல்களில் தன்னுரிமை பெற்றவரும், அனைத்தையும் அறிந்து இருக்கிறவரும் ஆவார்.

**தத்துவம் :** ஒரு ஆன்மா உலகத்தில் பிறக்கும் போது உணர்வு நிலைகளையும் தளைகளையும் மூன்று வகையாக பிரிக்கப்படுகிறது. அவைகள்

1. மனிதனாக பிறந்த ஒருவர் அறநெறியுடன் ஒழுக்கமாக கடவுளை மிகவும் நேசிக்கின்ற வர்க்கம்.
2. ஒவ்வொரு பிறப்பின் போதும் சந்தோஷம் மற்றும் அவதிகளை சந்திக்கின்ற வர்க்கம்.
3. கடவுள் மீது பக்தி கொண்ட பக்தர்கள் மீது சினத்தையும், கோபத்தையும் அதீதமாக வெளிப்படுத்தி அவர்களின் மனம் வருந்தும் படி செய்யும் ஓர் வர்க்கம். முற்போக்கான, சுதந்திரமான, ஆன்மாக்களும் ''தாரதம்ய'' எனப்படும் தரவரிசையை உடையவர்கள் ஆவார்கள்.

**மஹாவிஷ்ணுவை வழி படுதல் முறையே**

1. மஹாவிஷ்ணுவை முறையாக வழிபடுதல்
2. நாமகர்ண : குழந்தைகளுக்கு கடவுளின் பெயரிடுதல்

2. பஜனைகளின் மூலமாக கடவுளின் உன்னத கீர்த்தி வாய்ந்த பாட்டுகளின் மூலமாக ஸ்ரீ மத்வர் "ஸ்மரணை" என்று சொல்லக் கூடிய வார்த்தையினால் சதா சர்வகாலம் ஸ்ரீமன் நாராயணனை துதித்துக் கொண்டு இருக்க பழகிக் கொள்ள வேண்டுமென்றார். மற்றொரு முக்கியமான செய்தியாக அவர் சொன்னது 'எப்போதும் ஆழ்நிலை த்யானத்தின் மூலமாக சதா சர்வகாலம் கடவுளை நினைத்து வழிபட்டு கொண்டு வரும் நிலையை அடைந்தால் மரணகாலத்திலும் மரணபயமின்றி அவனுடைய த்யானத்தின் மூலமாக அதை போக்கிக் கொள்ளலாம்.

மேலும் அவர் கூறியதாவது பாவத்திலிருந்து விமோசனம் பெற்று மோக்ஷத்தை அடைய வேண்டுமானால், கடவுளின் மீது உள்ளார்ந்த பக்தியுடன் பற்றற்ற நிலை கொண்டு ஆழ்ந்த சிந்தனையுடன் தியானம் செய்து அத்தகைய மோட்சத்தை பெறவேண்டுமென்றார்.

**மற்றொன்றை அழுத்தம் திருத்தமாக ஸ்ரீ மத்வர் கூறியது:**

கடவுளின் பார்வை நம் மீது படவேண்டும் என்றால் தன்னைத்தானே விருப்பு வேறுப்புகளின்று விடுபட்டு வேதங்கள், சாஸ்திரங்கள், இதிஹாஸங்கள் மற்றும் புராணங்களை ஆழ்ந்த சிந்தனையுடன் படித்து புலன்களை அடக்கி உணர்ச்சிகளுக்கு நேர்எதிரான விளைவுகளை எடுத்துக்கொண்டு முழுநிறைவுடன் சுயகட்டுப்பாட்டை மேற்கொள்ள வேண்டும். இதுவே நம் மோட்ச சாதனமாக விளங்கும்.

ஸ்ரீ வியாஸராஜ ஸ்வாமிகள் மத்வசித்தாந்த கொள்கை கேட்பாடுகளை தான் இயற்றிய ஒரு ஸ்லோகத்தில் சொல்கிறார்:

*ஸ்ரீமன் மத்வமதே ஹரி பரதர: ஸத்யம் ஜகத் தத்வதோ*
*பேதோ ஜீவகணா: ஹரேரனுசரோ நீசோச்ச பாவம் கதா |*

*முக்திர் நைஜஸுகானுபூதி அமலா: பக்திஸ்ச தத்ஸாதனம்*
*ஹ்யக்ஷாதித்ரியம் ப்ரமாண மகிலாம் நாயைக வேத்யோ ஹரி: ||*

|| ப்ரமேய நவரத்ன மாலிகா ||

இதனுடைய வாக்யார்த்தம்

1. ஸ்ரீமன் நாராயணனே உயர்ந்தவர் (ஹரி)
2. உலகம் சத்யம். பொய் அல்ல
3. பேதங்கள் உண்மை
4. ஜீவர்கள் ஸ்ரீஹரிக்கு அதீனமானவர்கள் (அடங்கியவர்கள்)
5. ஜீவர்களுள் தாரதம்யம் உண்டு
6. தன் ஜீவஸ்வரூபத்தின் ஆனந்தத்தை அனுபவிப்பதே முக்தி
7. நிர்மலமான பக்தியே முக்திக்குச் சாதனம்
8. பிரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் (வேதங்கள்) இவற்றின் மூலம்தான் ஞானத்தைப் பெற முடியும்
9. வேதங்களின் மூலமாகத்தான் ஸ்ரீ ஹரி (நாராயணன்) அறியக்கூடியவன்.

ஸ்ரீ மத்வர் ''பக்தி'' என்பது முடிவற்றது. அதனுடைய சீரான இயக்கம் திரவத்தை போல ஒரே சீராக அவரிடம் பக்தி செலுத்த வேண்டும். அதற்கு ஆழ்ந்த சிந்தனை மற்றும் அதன் பொருளை இன்ன காரணத்தினால் நிகழ்கிறது என்பதை உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும். நம்முடைய சிந்தனை அனைத்தையும் அறிந்திருக்கிற விஞ்ஞானத்தை சார்ந்தது. உலகம் அவருடைய இயக்கத்தில் இயங்குகிறது என்ற பொருளை தெரிந்து கொண்டு பக்தி செலுத்தி உயர்ந்த இடமான மோட்சத்தை பெறவேண்டும்.

பக்தியுடன் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டு மெய்பொருளை கண்டறிவதே ஞானம். இதுவே பக்தி வளர்வதற்கு முக்கிய காரணமாக அமைந்து அதன் மூலமாக தெளிவு பிறப்பதற்கு இறுதியில் காணப்படும் சூழ்நிலையாகும். இச்சூழ்நிலை மேலும் பக்திக்கு தகுதியான

நிலை கிடைக்கும். இதன் மூலமாக சர்வ சுதந்திரத்தை அடையலாம். அதுவே நிரந்தரமான பேரின்பம், முக்தி, மோட்சம் என கூறப்படுவையாகும்.

-: ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து :-

**குறிப்பு :**

இவை அனைத்தும் ஸ்ரீ மத்வ விஜயத்தில் விவரிக்கப்பட்டுள்ள காரணம் என்னவெனில் ஸ்ரீ ஆச்சார்யர் வேத வேதாந்தங்களிலும் மற்றும் அறிவாற்றலாலும் மிகவும் பெரு வல்லமை படைத்தவர் என்பதையும் மற்றும் உடல் வலிமையால் இணையில்லா வலிமை படைத்தவர் என்பதையும் சுட்டி காட்டிடவே.



## A Brief sketch of the Life and Teachings of Sri Madhwacharya

CONTENTS

| | |
|---|---|
| 1. Introduction | 52 |
| 2. Madhwa's parents and history of Pajaka and Udupi Kshetra | 53 |
| 3. Birth and Childhood | 55 |
| 4. Upanayana and studies | 58 |
| 5. Sanyasa | 61 |
| 6. First South Indian tour | 63 |
| 7. Pilgrimage to Badari | 65 |
| 8. Founding Krishna temple at Udupi | 69 |
| 9. Second pilgrimage to Badari | 71 |
| 10. Stay at Udupi | 72 |
| 11. Ashtamatha at Udupi | 73 |
| 12. Paryaya | 74 |
| 13. A series of miracles | 75 |
| 14. Last days | 76 |
| 15. Philosophy and works | 76 |
| 16. Excerpts | 80 |

## INTRODUCTION

In this article an attempt has been made to give a brief description of the life and doctrine of Sri Madhwacharya, the great founder of Dwaita Philosophy. An attempt to give a glimpse of many sided personality of Sri Madhwacharya.

One becomes conscious and aware , however dimly, of the presence of a higher power than ourselves in this vast and mysterious universe. Science, no doubt, reduced much of the inscrutable mysteries of nature. But there are still many things in nature which defy scientific explanation and understanding. Science may not be able to prove the existence of God. What is more to the point is that it cannot, also disprove His existence. Metaphysics steps in where science halts baffled.

The richness and diversity of the universe is a fact of experience. But the rules constituting this universe are not in a chaotic mess. There is order, regulation, mutual adjustment and harmony in life. This shows that there is no unrestricted independence to all to act as they please. But the very principle of dependence presupposes an Independent central principle which explains, controls and interrelates the dependents into a "Universe".

The aim of philosophy, according to Madhwa, should be not merely to realize the distinction between the appearance and reality , but to understand and realize the "dependent realities". He is not an uncritical realist who takes everything to be real. He is not also a sentimental idealist who denies all but one reality. He is a rational realist who admits whatsoever is established on the uncontradicted evidence of Pramanas, the senses, the mind and Sakthi in addition to reason and Revelation.

His main aim was to make everyone realize Hari Sarvothama:

# A Brief sketch of the Life and Teachings of Sri Madhwacharya

It is believed that Sri Hanuma, Bheema and Madhwa are the three incarnations of the Wind God, Vayu. Smruthis , Sruthis and Puranas entol this. In the name of Hanuman he served Sri Rama, as Bheema served Sri Krishna and again as desired by God he chose to serve Lord Vedavyasa in the name of Madhwa. Sri Madhwa himself has openly declared in about ten of his thirty seven works that he is such.

Sri Madhwa's life and work were authentically written by Sri Narayana Pandithacharya, a contemporary to Sri Madhwa in his book "Sri Sumadhwa Vijaya" It has been acclaimed as an authoritative work and accepted by one and all.

**Madhwa's parents and history of Pajaka and Udupi Kshetra.**

The parents of Sri Madhwa belonged to the sect of Bhagavata Sampradaya Brahmins. His father was Madhyageha Bhatta (otherwaise known as Naddantillaya) and mother Vedavathi. He was a pious Brahmin well versed in Vedas, Itihasas and Puranas and well versed in Bhagavata and Mahabharatha. He spent his time giving discourses to large audiences. He believed in Smrities and Puranas and cordially adhered to the duties of a house holder. As he had no son, everyday for twelve years he used to walk from his village Pajaka to Ananteshwara Temple at Udupi praying for

an esteemed son endowed with divine qualities. Pajaka Kshetra was a holy place. The vanity of hill known as Vimanagiri lent this village a great importance. On this hill is situated an ancient temple dedicated to Goddess Durga. This temple is traced by Lord Parasurama himself.

Besides the Durga temple, the four theerthas built by Parasurama, known as Parasu Theertha, Dhanus Theertha, Gadaa Theertha and Bana Theertha, are within the radius of a mile or two. These are ponds of sanctity largely resorted to by Pilgrims.

These names are derived from the deities of the two ancient temples in this town temple of Chandra Mouleeswara and Ananteshwara. In Sanskrit "udu" means stars and "pa" means husband , Lord etc. Udupa means Moon – Chandra . It is said that Chandra did penance at this place to please Lord Shiva. Lord Shiva gave darshan to Chandra at this place. So the deity is known as Chandra Mouleeshwara. Udupi was also known as Sivalli. In the temple of Ananteshwara, it is believed that Lord Vishnu is in the form of Linga, seated on a pedestal of silver, popularly called Siva-belli, the Silver Siva. The name Sivalli must have originated from this. Hence the town is known as Rajata Peetapura- Rajata means silver and peeta is seat. Tradition says that it is Lord Parasurama himself took his seat on the silver pedestal. The Tulu speaking Brahmins of this place were worshippers of both Siva and Vishnu.

"Ananta" means the serpent Shesha. Esha means Lord . Ananteshwara means Lord of Shesha, that is Narayana reclining on the serpent Shesha. Ananta is also another

name of Lord Vishnu. Ananteshwara temple is supposed to be a Vishnu temple, though the image is a lingam. There were many temples with Sivalingam, but in some of them the Lingam was considered Vishnu, as in Ananteshwara temple. Both Vishnu and Siva Sahasranamams were chanted in these temples. The Deity in some temples was called Shankaranarayana, and in some others Hari - Hara. Thus it was a place of fusion of Saivism, Vaishnavism and Advaita.

There is a special tradition that pilgrims must first visit Chandramouleeshwara, then Ananteshwara and from there must proceed to seek darshan of Lord Krishna. Even now the Udupi Ashta Matha Swamijis visit the temple in this order before they ceremoniously take charge of the management of Sri Krishna Matha during the Paryaya function.

**Birth and childhood**

Madhyageha Bhatta's prayers were answered and by Lord's grace he got a son, who became the great Acharya. It was Mukhyaprana who entered the body of Madhyageha's wife and she delivered a beautiful infant with large eyes and a moon like face. The father named him Vasudeva to indicate that he was born to give the correct knowledge to the world and that he would ever be devoted to Lord Narayana. In Sanskrit Va means Knowledge, Asu means Prana-wind and Deva means God.

Sri Madhwa was born in 1238 on the Vijayadasami day at a place called Pajaka near Udupi, otherwise known as Rajata Peetapuram.

Miraculous events occurred centering on Vasudeva even from infancy. Madhyageha Bhatta, the father , took the infant one day to the temple of Ananteshwara at Udupi and dedicated him to the Lord. His path lay through forests inhabited by man-eating wild animals, but having the divine boy in his hand, the father could pass through these regions without any danger.

Vasudeva grew day by day a veritable picture of glowing health and cheer. Once Vasudeva's parents left him with his elder sister to attend an urgent duty. Infant Vasudeva began to cry. All efforts to calm him proved of no avail. She thought that the child must be hungry and fed him boiled horse gram meant for cows. Child ate until the whole quantity was exhausted, the infant's health was not in the least affected.

In another incident, one year old Vasudeva suddenly disappeared from home. Parents were naturally worried and went about searching. Their quest was fruitless for hours. Atlast they met the child coming along merrily, hanging from the tail of a bull. Bull is an indication of Dharma. By this Sri Madhwa showed that he has come to follow Dharma and will never at any stage leave Dharma. He will always walk in the path of Dharma.

Once Madhyageha Bhatta happened to be entangled in difficulty by not being able to repay a debt of a bullock bought from a debtor. The debtor sat at the door and refused to move until the debt was repaid. Vasudeva realizing the situation, promptly made up his mind how to act. He went round the house and beckoned to the debtor to go with him. Vasudeva picked up a few tamarind seeds

and gave it to him. To his surprise , it had turned out to be coins amounting to full discharge of the dues.

The debtor returned to Madhyageha Bhatta and told him that he was free, because the boy had repaid the debt. Actually Vasudeva satisfied the debtor of his father by giving him only tamarind seeds, creating in him the feeling that, through the seeds, what was bestowed on him was the great consummation, Moksha.

Once when Vasudeva was three years old, his parents took him along to attend a function at a place called Nidiyur. In the midst of the function Vasudeva suddenly disappeared. Vasudeva went into a neighbouring forest. Though warned by travellers on the way about the dangers there, he proceeded and performed worship to Lord Narayana in a temple in the forest of Kaduvoor and stayed at another temple of Siva at Bannanje. From there he went to Udupi and worshipped at the shrine of Ananteshwara. Tearful parents began vigorous search . Some said they saw a child at Kaduvoor, some said they saw him at Bannanje temple, they could not find Vasudeva. They came to Udupi and arrived at Ananteshwara temple. Vasudeva was standing before Ananteshwara with folded hands. When questioned as to who protected him in all these dangerous regions, he replied "Why? Shankara-Narayana escorted me to Bannanje. Sri Hari of that temple guided my steps to the east temple of Udupi and that deity brought me hither. I travelled not alone and unescorted". He was a child to show the divine path to the people. We see that Sri Madhwa told the same thing to the Muslim King in his thirties. When the

